கடவுள் துணை.

# சர்வசமய சமரசக்
# கீர்த்தனைகள்.

இவை

மாயூரம் மாஜிமுனசீப்

## ச. வேதநாயகம்பிள்ளை

அவர்களால்

இயற்றப்பட்டு

இராயபுரத்திலிருக்கும்

ம. ச. இயாகப்பிள்ளையவர்கள்

பதிந்தபிரதிக்கிணங்க

காரைக்கால்

முகம்மதுலமதானி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1885.

இதன்விலை ரூபா - ௧.

கடவுள்துணை.

# சர்வசமயசமரசக்

# கீர்த்தனைகள்.

இவை
[illegible]

மாயூரம் மாஜீ முன்சீப்

## ச. வேதநாயகம்பிள்ளை

அவர்களால்

இயற்றப்பட்டு

இராயபுரத்திலிருக்கும்

ம. [illegible]ா. இயாகப்பிள்ளையவர்கள்

பதித்தபிரதிக்கிணங்க

காரைக்கால்

முகம்மதுஸ்மதானி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

———:0:———

1885.

## சர்வசமய சமரசக்கீர்த்தனைகளின்

# அகராதி.

—*—


| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
|---|---|---|
| அடித்தாலும்... ... | ௧௮௪ | ௧௭௯ |
| அநுதினம்இந்தப்படி... | ௧௫௭ | ௧௩௮ |
| அந்தப்பெரியதுரை ... | ௧௬௬ | ௧௪௭ |
| அபயம்நீயருளுவாய் ... | ௭௪ | ௬௫ |
| அப்பாஇதென்ன ...... | ௧௬௪ | ௧௪௫ |
| அப்போதுனே... ... | ௩௭ | ௩௪ |
| அம்புயப்பதம் ... ...... | ௩0 | ௨௯ |
| அருள்புரிவாயே... ... | ௧0 | ௯ |
| ஆண்டருளே ...... | ௮ | ௭ |
| ஆதரித்திடநல்ல... ... | ௪௯ | ௪௪ |
| ஆதிபரமநாதாஞான .. | ௫௩ | ௪௮ |
| ஆதிபரமநாதாநல்ல ... | ௫௭ | ௫௧ |
| ஆதிமூலனே ... ... | ௧௩௩ | ௧௧0 |
| ஆதியேபரஞ்சோதி ... | ௨௭ | ௨௬ |
| ஆரணமயநய ... ... | ௭௭ | ௬௭ |
| ஆர்வேணுமோ... ... | ௧௭௪ | ௧௫௭ |
| ஆளாயோ... ... ... | ௧௩௮ | ௧௧௪ |
| ஆள்வாயெனதுளம் ... | ௨௪ | ௨௩ |
| இந்தஉத்தியோகம் ... | ௧௬௯ | ௧௫௧ |
| இந்தஉபகாரம்... ... | ௧௯ | ௪௮ |
| இந்தநிமிஷமே... ... | ௧௮ | ௧௭ |
| இந்தப்பிழைகளெல்லாம் ... ... ... | ௧௬ | ௧௪ |
| இந்தமனம் ... ... | ௧௩௫ | ௧௧௧ |
| இந்தவரந்தருவாய் ஸ்வாமி... ... ... | ௧௫ | ௧௪ |
| இந்தவரந்தருவாப் ... | ௫௪ | ௪௯ |
| இந்தவழக்குக் கெல்லா | ௧௬௩ | ௧௪௪ |
| இந்தவேளை ... ... | ௯0 | ௭௭ |
| இப்படிப்பட்டநான்... | ௧௨0 | ௧00 |
| இரக்கஞ்செய்வாயே... | ௫௯ | ௫௨ |
| இவளவுதான் ... ... | ௪௮ | ௪௩ |
| இனியாகிலுமனமே ... | ௧௪௨ | ௧௧௮ |
| இன்னமுந்தாமதம் ... | ௮௭ | ௭௫ |
| இன்னந்தாயதம் ... | ௭௯ | ௬௮ |
| இன்னமும்என்மீது ... | ௧௧௯ | ௯௯ |
| இன்னநதான் பராமுகமோ ... ... | ௧௨௭ | ௧0௬ |
| இன்ன்ம்பராமுகம் ஏதோ ... ... | ௬௧ | ௫௪ |
| இன்னம்பராமுகமாமோ... ... ... | ௧௨௩ | ௱௩ |
| ஈசனேமலநாசனே ... | ௩௫ | ௩௩ |
| ஈசாநின் ... ... ... | ௨௬ | ௨௫ |
| உட்லைநம்பாதே... ... | ௧௫௧ | ௧௩௰ |
| உதவிசெய்ய ... ... | ௯௪ | ௮௰ |
| உய்யும்வகை ... ... | ௧௫௬ | ௧௩௭ |
| உற்றலோளனை... ... | ௧௭௬ | ௧௬௰ |
| உனக்கேநமஸ்காரம்... | ௧௩௭ | ௧௧௩ |
| உனைநானே ... ... | ௮௰ | ௬௯ |
| உன்னிடத்தில்... ... | ௫ | ௫ |
| உன்னையெனக்கு... ... | ௮௪ | ௭௨ |
| உன்னைத்தவிர... ... | ௮௮ | ௭௫ |
| உன்னைநம்பினேன் ... | ௫௰ | ௪௫ |
| உன்னைப்போலெனக் . | ௱௩ | ௮௭ |
| உன்னைமறவாமல் ... | ௯௫ | ௮௧ |
| ஊருக்கெல்லாம்... ... | ௧௮௬ | ௧௭௯ |
| எககால்மும் ... ... | ௧ | ௧ |
| எத்தனைகவி ... ... | ௧௩௧ | ௱௮ |
| எத்தனையானாலும் ... | ௧௮௫ | ௧௭௭ |
| எந்தநாளிலும் ... ... | ௧௬௭ | ௧௪௯ |
| எந்தவிதமும் ... ... | ௧௨௧ | ௱௧ |
| எந்தையேஉனக்கு ... | ௧௩௬ | ௧௧௨ |
| எப்படியும்பரமே ... | ௮௩ | ௭௧ |
| எவளோ அவளே ... | ௧௭௯ | ௧௬௭ |
| எவ்வகையிலும்... ... | ௩௮ | ௩௫ |
| எனக்குக்கட்டிய ... | ௪௨ | ௩௮ |
| எனைஆதரிப்பாயே ... | ௩ | ௩ |
| என்பிழைகள் ... ... | ௬ | ௬ |
| என்னசொன்னாலும்... | ௱௧ | ௮௬ |
| என்னவந்தாலும் ... | ௧௭௰ | 1௫௨ |
| என்னைநீஆளுவாய் ... | ௪௪ | ௪௰ |
| என்னைஆளையா... ... | ௧௨ | ௧௧ |
| ஏகநாதா... ... ... | ௧௨௪ | ௱௩ |
| ஏசபராபரனே... ... | ௫௫ | ௫௰ |
| ஏகாகனயோகா... ... | ௧௨௨ | ௱௨ |
| ஏகாதிபரனே ... ... | ௬௭ | ௬௰ |
| ஏதுக்குவாங்குகிறீர் ... | ௧௭௩ | 1௫௫ |
| ஏதுபராமுகம் ... ... | ௭௬ | ௬௬ |
| ஏதோஇன்னம்... ... | ௱௫ | ௮௯ |

| கீர்த்தனைகளின் ஆதி | பாட்டு இலக்கம் | பக்கம் | கீர்த்தனைகளின் ஆதி | பாட்டு இலக்கம். | பக்கம் |
|---|---|---|---|---|---|
| ஏதோசோதனை ... ... | எரு | கூரு | தருணமீதையா ... ... | கூஎ | அஉ |
| ஏழைக்கிரங்க ... ... | சரு | சக | தருணம்தருணம் ... | அசூ | எச |
| ஏன் இன்னம் ... ... | சஎ | சஉ | தேவநாயகனே ... ... | உரு | உசூ |
| ஐயனே உயர் ... ... | ஙஉ | ஙக | தேவனே உன்னை ... | உஅ | உஎ |
| ஐயனே உன் அழகை ... | சங | ஙகூ | தேவாதிதேவபல ... | கூஉ | எஅ |
| ஐயா எனை ... ... ... | கச | கங | தேவாதிதேவனே | | |
| ஒருவர்மேலும் ... ... | கஎக | கருங | ஜீவனே ... ... | சூகூ | அச |
| ஓ-ஓ ஜெகநாதா ... ... | ககச | கூரு | தேவாதிதேவனே ... | கஎ | ககூ |
| ஓஓபிரபுத்துவமே ... | கஎரு | 1ருஅ | தேவாதிதேவே ... ... | சூசூ | ருகூ |
| ஓகோகாலமே ... ... | கசூக | கசஉ | நம்பினேனுனையே ... | கூஅ | அங |
| ஓடிநான் உனை ... ... | உ | உ | நல்லபெண்ணே ... ... | கஅ0 | 1சூஅ |
| கடைக்கண்ணால் ... | ருக | சசூ | நல்லவரம் ... ... ... | கஉசூ | க.ரு |
| கருணைகடாக்ஷம் ... | ருசூ | ரு0 | நாதனே தயை ... ... | சூங | ருசூ |
| கருணைகரப்பரம் ... | சசூ | சஉ | நாதா அடியேன் ... ... | க0உ | அசூ |
| கருணைகரமூர்த்தி ... | அக | எ0 | நாதாகனவேதா ... | ககஉ | கூச |
| கருணைசாகரா ... ... | சூகூ | சூக | நாதாகிடையாதா ... | கஉகூ | க0எ |
| கருணாலயநிதியே ... | கஉஅ | க0எ | நாதாநிரந்தரவினோதா. | ஙங | ஙக |
| கருணைநீசெய்ய ... ... | எங | சூச | நாயகர்பக்ஷமடி ... ... | கஅங | 1எரு |
| காக்கவேண்டும் ... ... | ஙச | ஙஉ | நாளேநல்லநாள் ... | க0ச | அஅ |
| காக்ஷிஎனக்கு ... ... | கூ | கூ | நானே உனை ... ... ... | அகூ | எசூ |
| காத்தருள் ... ... ... | எக | சூங | நானேபொதுநீதி ... ... | கசூஉ | கசங |
| கேளும்யூமான்களே ... | கஅகூ | கஅச | நிதநிதம் ... ... ... | ச00 | அரு |
| சஞ்சலமாய் ... ... ... | அரு | எங | நிச்சயம்இதுதானே ... | சூஅ | சூக |
| சமயம்ஈதையா ... ... | ககஎ | கூஅ | நித்தியானந்தத்தை ... | கசசூ | 1உச |
| சம்மதிஎனக்கு ... ... | ஙக | ங0 | நிரந்தரனே ... ... ... | ஙசூ | ஙங |
| சரணம்சரணம் ... ... | உக | உக | நினைப்பதெப்போது . | கசூஅ | கரு0 |
| சரணம்சர்வேசா ... ... | எஅ | சூஅ | நின்பதமேதுணை ... ... | உங | உங |
| சருவவினோதா ... ... | கங0 | க0அ | நீமலைக்கந்தே ... ... | கசச | 1உக |
| சருவேசாசரணம் ... | கசசூ | கூஎ | நீயேகதிஎனக்குன் ... | கூரு | ருஅ |
| ஜாலம்செய்வதேதோ . | ச0 | ஙஎ | நீயேசர்வசக்தன் ... ... | க0சூ | கூ0 |
| சித்தம்இரங்கி ... ... | கக | க0 | நீயேதுணைபரனே ... | ககக | கூச |
| சித்தம்உவந்தருள் ... | ச | ச | நெஞ்சேஇந்த ... | கசங | கககூ |
| சித்தம்எப்படியோ ... | அஉ | எ0 | பஞ்சநீர் ... ... | கஙகூ | 1கரு |
| சிந்தைக்குள் ... ... | உ0 | உ0 | பஞ்சவர்ணக்கிளி ... | கஅக | கஎ0 |
| சிச்சீர்லஞ்சம் ... | கஎஉ | கருச | பணமேஉன்னால் ... | 1ருஉ | கஙக |
| சிலம்நீதா ... ... ... | உஉ | உஉ | பத்தினிபோல் ... ... | 1அஉ | கஎச |
| செய்யவேண்டுமோனால் . | கருஅ | கஙகூ | பரபிரமமே ... ... | க0கூ | கூஉ |
| ஜெகநாதா ... ... | ருஅ | ருஉ | பரனே அடியர் ... | உகூ | உஅ |
| ஞானகுருபரவடிவே . | க0எ | கூக | பரனேபக்தர் ... ... | சூ0 | ருங |
| ஞானமார்க்கம் ... ... | கூங | எகூ | பாசத்தால் ... ... ... | ருஉ | சஎ |
| ஞானோதயவரம் ... | கஙஉ | க0கூ | பாதம்நம்பினேனே ... | கக0 | கூங |
| தஞ்சம்நீயே ... ... | சூச | ருஎ | பிக்ஷைஅருள ... ... | கஙச | கக0 |
| ததியிதென்முகம் ... | ஙகூ | ஙசூ | புண்ணியம்போல் ... | கசஎ | 1உச |
| தயைபுரிய ... ... | எ0 | கூஉ | புத்திஇதுமகளே ... ... | கஎஅ | 16ரு |
| தயைபுரியே ... ... ... | கஉரு | க0ச | புரட்டெல்லாம் ... ... | கருகூ | கச0 |
| தருணங்கருணை ... ... | கங | கஉ | பெண்ணாசையே ... ... | கருரு | 1ருரு |

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். | கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இலக்கம். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| பொருளைவிரும்ப... ... | ௧௪௮ | ௧௨௫ | மைத்துனரோநாளும் ... | ௧௯௨ | ௧௮௮ |
| போதந்தரஎன்ன ... | ௧௧௫ | ௯௬ | மைத்துனனோ ... | ௧௯௧ | ௧௮௭ |
| போதும்போதும் ... | ௧௬௫ | ௧௪௬ | வாவாஜெகநாதா ... | ௭௨ | ௬௩ |
| போனதுபோகட்டும்... | ௧௪௫ | ௧௨௨ | வாவா-வாவா ... ... | ௧௧௮ | ௯௯ |
| மயங்குகிறாய்மனமே ... | ௧௬0 | ௧௪௧ | வாவாவாதேவே... ... | ௯௬ | ௮௧ |
| மனமேஉனக்கு... ... | ௧௫௪ | ௧௩௪ | வாழ்வைநம்பாதே ... | ௧௫0 | ௧௨௮ |
| மனமேநீசன் ... ... | ௧௪0 | ௧௧௭ | வித்தையைப்படிப்பியுங்கள் ... ... ... | 1௮௬ | ௧௮௧ |
| மனமேநீமறவாதே ... | ௧௪௧ | ௧௧௭ | வினையேஎனையே ... | ௭ | ௭ |
| மாதரைநினையாதே ... | ௧௫௩ | ௧௩௩ | வீண்கர்வமேன் ... ... | ௧௪௯ | ௧௨௭ |
| மாதேஎன்வார்த்தை . | ௧௯௰ | ௧௮௬ | வேதநாயகனேஎவ்விதமும் ... ... ... | ௪௧ | ௩௭ |
| மார்க்கம்அல்லடிமானே | ௧௮௭ | ௧௮0 | வேதஞயகனேமெய்... | ௧௧௩ | ௬௫ |
| மார்க்கம்இதுமகனே . | ௧௭௭ | ௧௬௩ | வேதநயகா ... ... ... | ௬௨ | ௫௫ |
| மெஞ்ஞானம் ... ... | ௯௧ | ௭௭ | | | |
| மெய்யிதுமெய்யிது ... | ௧0௮ | ௯௨ | | | |



சர்வசமய சமரசக்கீர்த்தனைகளி லுள்ள

# இராகங்களின் அகராதி.





| இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம். | இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|---|---|
| அசாவேரி ... | ௫ ௫௨- ௧௫௭ - ௧௬௭ - ௧௮௫ | கல்யாணி ... | ௧௩-௧௯ - ௮௪ - ௧௪௨- ௧௮௬ |
| அடாணா ... | ௨௬-௬௯-௧௪௧ | கற்கடா ... | ௨௨ |
| அயூர்வம் ... | ௧௩0 | கனகவசந்தம். | ௧௧௧-௧௪௮ |
| அமீர்கல்யாணி | ௧௨௯ | கன்னடகௌளை ... | ௫௩ |
| அம்சதொனி | ௧௩௨ | காப்பி... ... | ௧0௪ |
| ஆகிரி ... ... | ௩௧-௬௩ | காம்போதி ... | ௪-௨௯-௩௮-௪௨ -௫௭- ௧௮௭ |
| ஆநந்தபைரவி | ௩௬-௩௭ | குந்தளவராளி | ௧00 ௧௪0 |
| ஆரபி ... ... | ௨௫ | கெங்காதரங்கணி ... | ௮0 |
| இந்துஸ் தான் காப்பி... | ௧0௨ - ௧௧௮-- ௧௧௯- ௧௪௬-௧௪௭-௧௫0- ௧௫௧ ௧௯௨ | கேதாரகௌளம் ... | ௩-௨0-௩௫ |
| ஈசமநோகரி... | ௭௪-௧0௮ | கேதாரம் ... | ௨௮-௩௨ |
| உசேனி ... | ௨௩-௯௭-௧௨௪ -௧௩௯- ௧௮0 | கௌளிபந்து | ௧௧௪-௧௧௬-௧௫௪ |
| எதுகுல்காம்போதி... | ௫௬-௬௧-௧௪௩-௧௪௪ | சங்கராபரணம் ... | ௬0-௧௫௨-௧௫௬-௧௭௨ |
| கண்டா ... | ௯௬ | சஹானா ... | ௭௯ - ௮௩ - ௯0 - ௯௪ ௧௭௮ |
| சமாஸ் ... | ௪0 ௫௫ ௭௭-௧௫௩ | | |
| கரகரப்பிரி | ௫௪ | | |

| இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம் |
| --- | --- |
| சரசாங்கி ... | ௧௩௧. |
| சாமந்தா ... | ௯௧. |
| சாமா... ... | ௪௧-௮௮-௧0௧-௧0௯. |
| சாரங்கா ... | ௪௯-௧௭௯. |
| சாவேரி ... | ௧0௫-௧௬௨-௧௮௪. |
| சாளங்க பைரவி ... | ௯௫ |
| சுத்தசாவேரி.. | ௮௬-௮௯, |
| சுப்பிரதீபம் .. | ௭. |
| சுருட்டி ... | ௧௭-௧௨0-௧௪௫. |
| செஞ்சுருட்டி. | ௩௯-௪௩. |
| சைந்தவி ... | ௪௫. |
| சௌராஷ்டிரம் ... | ௧௩௫-௪௫௫-௧௬௩-௧௬௬-௧௭௨-௧௮௧-௧௮௨, |
| ஜங்கலா ... | ௧௨௬ |
| ஜயந்தஸ்ரீ ... | ௩௩ |
| ஸ்ரீராகம் ... | ௬௨ |
| தர்பார் ... | ௧௨-௧௬௧ |
| தன்னியாசி... | ௪௬-௬௮-௧௫௮-௧௭௫ |
| தீனசங்கராபரணம் ... | ௧௩௩ |
| துசாவந்தி ... | ௨-௨௭ |
| தேசமுகாரி . | ௧௧௫ |
| தேசிக தோடி | ௧௪-௧௩௭ |
| தேவ காந்தாரி | ௧ |
| தேவமனோகரி | ௮௭-௧௪௯ |
| தோடி... ... | ௭0-௭௨-௭௬-௧0௭-௧௩௮. |
| நாகத்தொனி. | ௯௯ |
| நாதநாமக் கிரியை. | ௧0-௧௫-௫0-௧௧௩-௧௧௭-௧௬௪-௧௬௮-௧௮௮ |
| நீலாம்புரி ... | ௬௭ |
| பங்களா ... | ௮௫ |
| பந்து ... ... | ௧0௬ |
| பந்துவராளி .. | ௫௧-௧௫௯ |
| பரஸ் ... ... | ௮௫௮-௬௫-௮௨-௯௨-௧௯௧ |
| பலஹம்சா ... | ௯௩ |
| பியாகடை ... | ௩0-௭௫-௧௭௪ |
| பியாகு... ... | ௧௮-௬௪-௧0௩-௧௧0-௧௩௪-௧௭௬ |
| பிலகரி... ... | ௧௨௮-௧௮௩ |
| புன்னாக வராளி... | ௩௪-௧௨௫-௧௬௫-௧௯0 |
| பூபாளம் ... | ௬௬ |
| பூரணகௌளை | ௬ |
| பூரணச் சந்திரிகை ... | ௧௨௭ |
| பூரிகல்யாணி . | ௮௧-௯௮ |
| பைரவி ... | ௧௯-௧௧௨-௧௨௨-௧௭௧ |
| மத்தியமாவதி . | ௪௮-௫௯ |
| மணிரங்கு ... | ௧௧ |
| மனோகரம் ... | ௧௩௬ |
| மாஞ்சி ... | ௪௪ |
| முகாரி ... | ௨௪-௭௧-௧௭0-௧௮0 |
| மோகனம் ... | ௯-௪௭-௧௨௧-௧௨௩-௧௬௯-௧௭௭-௧௮௯ |
| யமுனா கல்யாணி ... | ௨௧ |
| ரீதிகௌளை ... | ௭௮ |
| லலிதா... ... | ௭௯ |
| வசந்தா ... | ௧௬0 |

### சர்வசமய சமரசக்கீர்த்தனைகளின்

# பலபிரிவுகள்

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| தேவதோத்திரக்கீர்த்தனைகள் ,, ,, ,, ,, | ௧-முதல்-௧௩௮-வரையில். |
| ஈசுரவருட்ப்பஞ்சத்தைப்பற்றி ,, ,, ,, , | ௧௩௯. |
| *ஹிதோபதேசக்கீர்த்தனைகள் ,, ,, ,, ,, | ௧௪௦-முதல்-௧௬௧-வரையில். |
| †உத்தியோகசம்பந்தக்கீர்த்தனைகள் ,, ,, | ௧௬௨-முதல்-௧௭௫-வரையில் |
| ⁂ குடும்பசம்பந்தக்கீர்த்தனைகள் ,, ,, , | ௧௭௬-முதல்-௧௯௨-வரையில் |

## ஹிதோபதேசக்கீர்த்தனைகளின் விவரம்.

| விவரம், | கீர்த்தனைகளின் இலக்கம், |
|---|---|
| கட்வுளைத்தியானிக்கும்படிவற்புறுத்தல் ... | ௧௪௦-௧௪௧-௧௪௨. |
| துர்க்குணங்களைவெளியிடல்... ... ... ... | ௧௪௩. |
| மனமயக்கந்தவிர்த்தல் ... ... ... | ௧௪௪. |
| நற்புத்திகூறல் ... ... ... ... | ௧௪௫. |
| நித்தியானந்தந்தேடல் ,, ,, ... ... ... | ௧௪௬. |
| கள்ளஞானம் ... ... ... ... ... .. | ௪௪௭, |
| பொருளாசையொழித்தல் ... ... ... ... | ௧௪௮. |
| செல்வச்செறுக்கு ,, ,, ,, ,, ,, ,, ,, | ௧௪௯. |
| உலகவாழ்வைவெறுத்தல் ,, ,, ,, ,, ,, | ௧௫௦. |
| உடலைவெறுத்தல் ,, ,, ,, ,, ,, ,, ,, | ௧௫௧. |
| பணதூஷணை ,, ,, ,, ,, ,, ,, ,, ,, | ௧௫௨. |
| பரஸ்திரீகமனம்விலக்கல் ,, ,, ,, | ௧௫௩-௧௫௪-௧௫௫. |
| உய்யும்வழி ,, ,, ,, ,, ,, | ௧௫௬. |
| நெஞ்சொடுபிணங்கல் ,, ,, ,, ,, | ௧௫௭. |
| துர்க்குணம்போன்றநற்குணங்கள் ,, ,, | ௧௫௮. |
| மனவஞ்சகத்தைப்பற்றி ,, ,, ,, | ௧௫௯. |
| மனமயக்கம் ,, ,, ,, ,, ,, | ௧௬௦. |
| கால்தூஷணை ,, ,, ,, ,, | ௧௬௧. |

## † உத்தியோகசம்பந்தக் கீர்த்தனைகளின் விபரம்.

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| நியாயபரிபாலனம்செய்யவரம்வேண்டல் ... | ௧௬௨. |
| துர்வழக்காளிகளைப்பற்றி ... ... ... | ௧௬௩. |
| உத்தியோகசங்கடம் ... ... ... | ௧௬௪-௧௬௫. |
| பெரியதுறையாகியகடவுளுக்கும் மனுஷ்துறைகளுக்கும் உள்ளபேதம் ... ... | ௧௬௬. |
| கோட்சொல்லும்உத்தியோகஸ்தர்களைப்பற்றி. | ௧௬௭. |
| சுவாமியைநினைக்கநேரமில்லையென்றுமுறை | ௧௬௮. |
| உத்தியோகத்தைவெறுத்தல்... ... ... | ௧௬௯. |
| துன்பத்துக்குஅஞ்சாமை... ... ... | ௧௭0. |
| பிறர்மேற்குறைகூறாமை... ... ... | ௧௭௧. |
| பரிதானகண்டனம் ... ... ... | ௧௭௨-௧௭௩-௧௭௪. |
| பிரபுத்துவதூஷணை ... ... ... | ௧௭௫. |

## ‡ குடும்ப சம்பந்தக்கீர்த்தனைகளின் விவரம்.

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| தாய்தந்தையரைநமஸ்கரித்தல் ... ... | ௧௭௬ |
| தகப்பன்மகனுக்குப்புத்திகூறல்... ... ... | ௧௭௭ |
| தகப்பன்மகளுக்குப்புத்திகூறல் ... ... | ௧௭௮ |
| உத்தமஸ்திரியின்லக்ஷணம் ... ... ... | ௧௭௯ |
| பெண்பார்க்கத்தூதனுப்புதல் ... ... ... | ௧௮0 |
| தூதன்பெண்பார்த்துவந்துசொல்லல் ... | ௧௮௧ |
| தலைவியிட்டுவைக்கவேண்டியநேசத்தைப்பற்றித் தலைவன் கூறுதல் ...... ... | ௧௮௨ |
| தலைவனுடையமேன்மையைத் தலைவிதோழிக்குக் கூறுதல் ... ... ... | ௧௮௩ |
| துன்பஞ்செய்தாலுந்தலைவனே கதியென்று தலைவிதோழிக்குச்சொல்வது ... | ௧௮௪ |
| தலைவன்செய்தநன்மையைத்தலைவிகூறல் ... | ௧௮௫ |
| மாமிநாத்திமுதலானவர்களின்கொடுமையைப்பற்றி ஒருஸ்திரீமுறையிடல் ... ... | ௧௮௬ |
| கணவனைப்பகைத்த ஸ்திரீயை அவள்தாய் கண்டித்தல் ... ... ... | ௧௮௭ |
| தங்களுக்குப்படிப்பிக்கும்படி ஸ்திரீகள் புருஷர்களைவேண்டுதல்... ... ... | ௧௮௮-௧௮௯ |
| மூட்டை விவாகஞ்செய்யாதபடி-ஒருஸ்திரீயைத் தடுத்தல் ... ... ... | ௧௯0 |
| மைத்துனர்கலியாணத்திற்பாடிய பரிகாசக்கீர்த்தனை ... ... ... | ௧௯௧ |
| மைத்துனருக்குப்புத்திபோதித்தல் ... | ௧௯௨ |

கடவுள்துணை.

# சர்வசமய சமரசக்கீர்த்தனைகள்.

——»»(*)««——

## ௧. இராகம் தேவகாந்தாரி ஆதிதாளம்

### பல்லவி.

எக்காலமும் உன்தன் பொற்கால்பணிந்துகொண்
டிருக்கநீவரம் அருள்வாய், எக்கால.

### அநுபல்லவி.

தக்கோர் அபிமான ஞானசீலா
சகலபுவன ரக்ஷ காநுகூலா. எக்கா.

### சரணங்கள்.

௧. சந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன் அர விந்தபாதம்சூடி
வந்தனைகள் அநந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துநைந்துருகி. எக்கா.

௨. துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்குஞ்ஞான அகளங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பலப
தங்களோடுசுப மங்களங்கள்சொலி. எக்கா.

௩. பழுதிலாதுதினம் முழுதும்உன்னைநாடி
தொழுதநேசமுடன் அழுதுபாடிஆடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோலமனம்
இளகியே அதிக புளகிதாங்கமுடன். எக்கா.

௪. பூதலம்பரவு பாதவேதநாதா
சாதகஞ்செய்யும் அபேதநீததாதா
போதநாயகனே பூதநாயகனே
கீதநாயகனே வேதநாயகனே. எக்கா.

## ௨. இராகம் ஜுசாவந்தி-ஆதிதாளம்

### பல்லவி.

ஓடிநான்உனைத் தேடிவந்தேன் - எனக்
குதவிசெய்தருள் ஐயனே. ஓடி.

### அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோத பிரசாதபிரபோத
அபேத அதீத நிர்வாதகியாதனே. ஓடி.

### சரணங்கள்.

௧. அற்பமானபதார்த்தம் - சற்றும்விரும்பேன்
ஐயா இது யதார்த்தம்
அற்புதபரமார்த்தம் - கொடுத்தருளில்
அதுவேஉப யோகார்த்தம்
பற்பலவிசித்திரனே
கற்பனு சமுத்திரனே
பாச விநாச சுரேசநேச
பிரகாச விகாச உலாச விலாசனே. ஓடி.

௨. வந்துனையே அடுத்தேன் - கீர்த்தனமாலை
வகைவகை நான்தொடுத்தேன்
வந்தனம்கைஎடுத்தேன் - நீவசிக்கஎன்
மனக்கோயிலுங் கொடுத்தேன்
அந்தமனை உன்க்கே
உன்தன் மனைஎனக்கே
ஆய விதேயர்கள் நேய சகாய
அகாய உபாய நியாய விதாயனே. ஓடி.

௩. அன்பர்உபாசனனே - பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பநிவேசனனே - வேதநாயகன்
இதய சிம்மாசனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந் தன்னிற்சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அமோக தியாகனே. ஓடி.

## ௧. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

### பல்லவி.

எனை ஆதரிப்பாயே - என்மன இருள்
தனையேபிரிப்பாயே. எனை.

### அநுபல்லவி.

வினையே அரிக்கும்செல்லா
வீணனன் ஒருபுல்லா.
நினையா என்மனம்கல்லா
நிதம் அதனுடன்மல்லா

நிச்சயப்பிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப்பிரசாதனே
துர்ஜனப்பிரமாதனே. எனை.

### சரணங்கள்.

௧. துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோஎல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமே கேள்என்சொல்லை

சிஷ்டர் சமுத்தாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே. எனை.

௨. அடியனன் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற் கருணாரசம்
பாலித் தருள்கவசம்

பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே எனை.

௩. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன் கவலை
தரும சைதன்னியநிலை
தந்தென் மயக்கந்தொலை

சங்கட நிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
துங்கவேத நாயகா. என.

---

## ௪. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி

சித்தம்உவந்தருள்செய்ய-இத்தனை தாமதமேது
சீலனேபுவனபரி-பாலனேமூலனேநீயுன். சித்தம்.

### அநுபல்லவி.

நித்தனேபுவியெங்கும்பிர-சித்தனே நிகிலலோக
கத்தனேஜீவகோடிகட்-கத்தனேசுத்தனேநீயுன். சித்தம்.

### சரணங்கள்

௧. அசடனென்பதென்ன ரகசியமா-பெற்ற
அன்னையிடம்உண்மைசொல்லவேபயமா
வசஞ்செய்தருள்வதுனக்கோர்விஷயமா - யாவும்
வல்லஉனக்கிதென்ன அதிசயமா:

வசனசாதுரியனே
மனனமாதுரியனே
சுஜனர்கள்பிரியனே
சுரர்தொழும்பெரியனே. சித்தம்.

௨. நிதமும்உனதுபதகைங்கரியமே - செய்ய
நீயருளெனக்குச்சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெரும் சௌகரியமே - இனி
ஐயனேவேண்டேன் வேறுஐசுவரியமே

அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்பும் வாயா
விநய சங்கற்ப தூயா. சித்தம்.

௩. பூதபௌதிக மெல்லாம் நிறைவோனே - நல்ல
புண்ணியத் திருமறையை அறைவோனே
வேதநாயகன் மனம் உறைவோனே - ஞான
விழியில்லா தவருக்கு மறைவோனே,

போதகப்பிர காசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக்கிரு பேசனே
தாசருட் பிரவேசனே. சித்தம்.

---

## ரு. இராகம் - அசாவேரி - ஆதிதாளம்.

### பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்தில்சொல்லுவேன்
ஓ - ஓ - ஜகதீசா.

### அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவேஇந்தப் புவியில்நான்படுந்துன்பம். உன்னி.

### சரணங்கள்.

க. வயிறுபசிக்கும்பிள்ளை மாதாஇடம்போமன்றி
மற்றொருவரிடத்திற் சேருமோ-நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அது தீருமோ-கன

வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே

உலவுறுசல்லடை போற்பலஓட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பலசேட்டை
நித்தியம்நான்அத னாற்படும்பாட்டை. உன்னி.

உ. நாதனேநான்பிழை யாதுசெயினும்நின்னை
நம்பினேன்என்மேலின்னம் க்ஷாத்திரமா-பாரில்
ஓதரும்புலச்சத்து ர்ாதியர்கையில்என்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா-மறு

மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயே அபத்த பாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்

தீய அவயவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய்கைகளே ஆபாசம்
நான்குபக்கத்திலும் நான்படுங்கிலேசம். உன்னி.

௫. எத்தனைசுவைபாவம் வேண்டுமோனாலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-என்தன்
அத்தனே நானுன்சேயென் றறிந்தும்நோய்செய்யுமாயைக்
கார்தந்தார் இந்த அதிகாரமே-சர்வ

உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்கித்திய சந்தோஷ
பரசமயத்து வேஷ

பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியான
பலபுவனத்மகோ டிகள்அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அனைதந்தைகுருதெய்வஞ் சகலமுமான. உன்னி.

---

௬. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

பல்லவி.

என்பிழைகள் பொறுத்தருள்வாய் - எனை அலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்.

அநுபல்லவி.

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அநுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும். என்.

சரணங்கள்.

௧. பேயனைப்போல்விவகரிப்பேன்-துதிகவிகள்
ஆயிரம்உண்டாக்கிவிரிப்பேன்-என்செய்கைஎல்லாம்
வாயின்அன்பலாதுமனங்-தோயும்அன்புளதோசிறு
நாயின்அன்புமேயிலாமல்-தீயவம்பனாய்த்திரியும். என்.

உ. எண்ணவொண்ணுமோஎன்பவ[illegible] இந்த
மண்ணினில்என்ஜன்மம் அவமே-தினந்தினமும்
உண்ணலும்நித்திரைதனை-நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலும்அல்லாதுன்பதம் -எண்ணல்செய்தறியேன்ஸ்வாமி [என்.

ங. போதகம்என்னிடம் லயமே-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே-புவனமிசை
மாதவம்புரிபவர்க்குக்-கோதகலும்இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகாஇரங்கி. என்.

---

## எ. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

### பல்லவி.

வினையே எனையே மேவாதருளே.

### அநுபல்லவி.

நினையேநம்பினே னின்மலப்பொருளே. வினை.

### சரணங்கள்.

க. கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும உனதருள்குறியேனே. வினை

உ. பாவமென்பதற் கொருபதியானேனே
ஜீவனுய்வழி தெரியாமற்போனேனே. வினை.

ங. உதரபோஷணையன்றி உனைநினையேனே
இதயந்தனில்உன்னடி இணைபுனையேனே. வினை.

ச. பூதலந்தொழும்அதி புண்ணியர்மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே. வினை.

---

## அ. இராகம்-பரசு-ரூபகம்.

### பல்லவி.

ஆண்டருளே-கருணை-பூண்டருளே.

### அநுபல்லவி.

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே-உயர்-நீதியே எனை. ஆண்ட.

[illegible]ள் [illegible]ப்பனங்கள்.

க. என்னை ஆள்வது பாரமா - என
திடம்வர வெகுதூரமா
அன்னைக்கும் உபசாரமா-எனக்
கருள்புரிய இந்நேரமா - கன

ஆரியனே - மெய்ஞ்ஞான
சூரியனே - சர்வலோக
காரியனே - மிகுந்தஉள
தாரியனே - ஜகந்தனில்

உன்னையல்லது பின்னையார்துணை
யோகனே-சுக-போகனே-என்னை ஆண்ட.

உ. எனதுடலெனும் புல்லையே - காக்க
எவர்க்குங் காட்டுவன் பல்லையே
தினமும் ஆயிரந் தொல்லையே - இதில்
சிறிது மேசுகம்இல்லையே - கன

சேதனனே - பெரியபு
ராதனனே - பரமசி
கேதனனே - மெய்ஞ்ஞான
சாதனனே - அநுதினம்

நினது பாதம் நம்பினேன் அதி
நேசனே-பிர-காசனே-என்னை ஆண்ட.

௩. பொறுமை உனக்குச் சொந்தமே - நான்
புரியும்பிழை அநந்தமே
மறுமைபுறு நிற்பந்தமே - கெட
மலர் பாதாரவிந்தமே - கன

மாட்சியனே - அடியர்கண்
காட்சியனே - சர்வாண்ட
சாட்சியனே - தனிஅர
சாட்சியனே - தினந்தினம்.

சிறுவன் வேதநாயகன் பணி
கீர்த்தியே-அற்-மூர்த்தியே-என்னை ஆண்ட.

## ௬. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

### பல்லவி.

காக்ஷிஎனக்குக் கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா. காக்ஷி.

### அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சர்வாதிகாரனே
மாக்ஷியுடையோர்மகிழ் நிர்விகாரனே. காக்ஷி.

### சரணங்கள்.

க. அந்தரங்கபத்தி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ. காக்ஷி.

உ. மறந்தும்ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ. காக்ஷி.

௩. ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ. காக்ஷி.

௪. ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா. காக்ஷி.

---

## ௭. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

### பல்லவி.

அருள்புரிவாயே - எனதுள
மருள்தெரிவாயே.

### அநுப்பல்லவி.

இருளை நிகரும் சுருள் கொள் ஓதியர்
இலகும்பொருள்-உலகம்புரி-கலகம்படர்-விலகும்படி. அருள்.

சரணங்கள்.

க. நினைவெல்லாம் உன் நினைவதாயென் நெஞ்சம்உன்னுதோ - பழி
புனையும்வாய்வெறும்பேச்சைவிட்டுன்னைப் புகழ்ந்து பன்னுதோ
இனையளவு மெய்தனைவிடாது [சிறு
சிந்தித்துனை-வந்தித்திடு--புந்தித்திடம்-வந்துற்றிட. அருள்.

உ. எத்திசையும் உன்னுருவமாகவே இலகக்காணேனோ - சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனோ-கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-நாடித்தவம்-நீடிக்கதி-கூடிக்கொள. அருள்.

ந. நீதமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே - நாளும்
வேதநாயகன் காதல்மனப்பெண் மேவும்பர்த்தாவே - கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழிவிண்டுநல்-வழிகொண்டுனை-விழிகண்டிட. அரு

---

## கக. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் முத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே.

அநுபல்லவி.

உத்தமசீலர்தஞ் சித்தமலர்உறை
வோனே-கோனே-வானே-தேனே. சித்த.

சரணங்கள்.

க. நின்னடித்தொண்டனென்ன அறியும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாகிடப்
பண்ணே-கண்ணே-எண்ணே-விண்ணே. சித்த.

உ. பொய்த்தெய்வதங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம்முனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழில்அண்டம் அனைத்தையுந்தாங்கிடு
கையா-துய்யா-மெய்யா-ஐயா, சித்த.

ங. கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்தடருந்தன்மையே
தழுவிஎன்னெஞ்சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமண்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா. சித்த.

---

## கஉ. இராகம்-தர்பார். திரிபுடைதாளம்.

பல்லவி.

என்னை ஆளையா-என் விண்ணப்பம்
தன்னைக் கேளையா.

அநுபல்லவி.

மின்னைநிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே. என்னை.

சரணங்கள்.

க. அடியன்மேற்சினமா-என்குறைநீக்கி
ஆள்வதுகனமா
கடினம்நின்மனமா-எனதுநெஞ்சங்
கவலைக்காசனமா
படியில்என்னகத்துறு பாவஇருளைமாற்றித்
திடமுறவேமெய்ஞ்ஞான தீபமதனையேற்றி. என்னை.

உ. என்றுஞ்சஞ்சலமா - ஐயனேமாயைக்
கிவளவுபலமா
வென்றுகொள்புலமா - அதனால்ஏழை
மெலிவதுநலமா
நன்றுருவாகியநாதா என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங்கொடுவினைகளைப்போக்கி. என்னை.

ந. கைவிடலாமா - என்னிடம்வரக்
கால்மலர்நோமா
நைவினைபோமா - இனிமைதங்கும்
நன்னயநாமா
தெய்வநாயகனாகித் திகழுறும்அகளங்கா
கைவல்லியஞானநெறி கமழ்மதுரப்பிரசங்கா. என்னை.

ச° திக்திக்குங்தேனே - அமுதேகன
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே-எள்ளுளெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிவோனே
பத்தியுடனேவேதநாயகன் பணிவோனே. என்னை.

---

## கங. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

### பல்லவி.

தருணங்கருணைபுரிகுவாய்-ஐயா-உனக்கனந்தங்கோடி-
சரணஞ்சரணந்தெரிகுவாய் - மெய்யா.

### அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே - பொன்
திரணமென்றுன்னுவோர்பயனே - இத் தருணங்.

### சரணங்கள்.

க. இந்திரியச்சத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தல் பிரயாசம்
நிந்தனையான அநு பந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்
நீயேகதியன்றோ - ஒரு
தாயேதுயரன்றோ - சிறு
நாயேன்கெடல்நன்றோ - கன
தீயேன்உடல்குன்றோ - இது தருணங்.

உ. கோரமாய்த்தன்பிள்ளைசெய்யினுங்-தீது
கோபித்துநீக்கிடுந்தாயுண்டோ - ஓது
காரமானான்செயும்பாவம்பொ-றுது
கைவிடில்வேறெனக்காதர - வேது
காயத்தைஎடுத்தேன் - அரு
மாயத்தைஅடுத்தேன் - அநி
யாயத்தைஉடுத்தேன் - திரு
நேயத்தைவிடுத்தேன் - இது தருணங்.

ங. நச்சுமரத்தையும்வைத்தவன்-தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல்இ-ரானே
இச்சகமீதில்எனை அமைத்-தோனே
என்னைநீ ஆளாவிடிற்பிழை-யேனே.

ஏகந்தழையுருவே - சுக
போகந்தழைதருவே - கன
யோகந்தழைதிருவே - முதிர்
பாகந்தழைகுருவே - இது. தருணங்.

ச. நிதமும்நானும்பாதகச்-சேறு
நீக்கிடப்போதுமோநின்னருள்-ஆறு
விதியுங்கதியும்இல்லையே-வேறு
வேதநாயகனே அருள்-பேறு.
வேதத்துருவோனே - பல
பூதப்பெருமானே - கன
போதத்தமர்கோனே - இரு
பாதத்தைவிடேனே - இது. தருணங்.

---

## கச. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஐயாஎனை ஆண்டருளே - உனை
அண்டினனே-மனம்-வெண்டினனே. ஐயா.

### அநுபல்லவி.

பொய்யாம்வாழ்வினில்நான்குழையாமல்
போகாதிகளில்என்மனம்நுழையாமல். ஐயா.

### சரணங்கள்.

க. ஒருநிமிஷமுமுனதடிமறவாமல்
உலகழியினுமுனதருள்துறவாமல்
இருதயமதனிலோரிடர்பிறவாமல்
இழிவுறுபழியொடுநானிறவாமல். ஐயா.

உ. உன்னையலாதொருவரையுந்தொழாமல்
உதரநிமித்தம்எங்கும்ஓடியழாமல்
இந்நிலமீதுதுராசைஎழாமல்
இறந்தபின்னுநெரிநரகில்விழாமல். ஐயா.

ந. நல்வழிதனைஎந்நாளும்விடாமல்
நாட்டில்அசடனெனநான்பேரொடாமல்
பல்வகையாகியபழிகள்தொடாமல்
பாவையர்யோகத்திற்படிந்துகெடாமல். ஐயா.

ச. என்னுயிர்போலஎவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தைஎன்றுமேநாண
மின்னுங்குணபரணந்தனைப்பூண
வேதநாயகனேநானுனைக்காண. ஐயா.

---

## கரு. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

### பல்லவி.

இந்தவரந்தருவாய் - ஸ்வாமி - இந்த

### அநுபல்லவி.

பந்தவினையெலாம்அறவேண்டும் - உன்
பாததரிசனம்பெறவேண்டும். இந்த.

### சரணங்கள்.

க. தினமும்உன்பதமலர்தொழவேண்டும் - நான்
தேகபரவசமாயெழவேண்டும்.
அனல்மெழுகாயுருகியழவேண்டும் - இனி.
ஆனந்தக்கடலில்நான்விழவேண்டும். இந்த.

உ. தேகவிஷயாதிகள்கெடவேண்டும் - ஞான
தீபத்தைஎன்னுளத்தில்இடவேண்டும்.
பாகஅறப்பயிரைநடவேண்டும் - அந்தப்
பயிர்க்குன்அருட்புனலைவிடவேண்டும். இந்த.

ந. மோகப்பசாசுதனைவெலவேண்டும் - நல்ல
முத்திநெறியிலேசெலவேண்டும்.
நாகமெனும்புலனைக்கொலவேண்டும் - வேத
நாயகனேயுன்னுமஞ்சொலவேண்டும். இந்த.

---

## கசு-இராகம்-பைரவி ஆதிதாளம்.

### பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம்பொறுப்பாயே - பாச
பந்தங்களைகளைவேரறுப்பாயே. இந்த.

### அநுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பரமசுகம் அளிக்குங்கனதாதாவே. இந்த.

சரணங்கள்.

க. ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தனை
ஆகமாதிகள்சொல்யோக சாதனையில்கிறுத்தேன்
அநுதினமும்
வேதம்வேதியர்கள் ஓது நீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போலே
வீம்புபேசிப்பெரும்பாம்பு போலவிடம்பொறுத்தேன்
சதாகாலமும்
பூதலவாழ்வுதனைநாடினேன் - மறு
மாதர்கள்சுகந்தனைத்தேடினேன் - பஞ்ச
பாதகரொடும்உறவாடினேன் - கன
காதகனென்றுபெயர்சூடினேன்
ஆதுலர்க்கமுதீயாமலேதடுத்தேன்
சாதுஜனங்களைக்கண்டேதடிஎடுத்தேன். இந்த.

உ. நேயமானதந்தைதாயைச்சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களைஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோகசுகமாயவாழ்விற்செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருகக்கூட்டம்போலநாள்கழித்தேன்
அநுதினமும்.
தூயரைக்குறைசொல்லித் தூற்றினேன் - பெரும்
தீயரைத்தினந்தினம்போற்றினேன் - நல்ல
ஞாயவழக்குகளைமாற்றினேன் - பதி
னுயிரம்பொய்சொல்லத்தோற்றினேன்
வாயில்வந்தபடிவம்புகள்தொடுத்தேன்.
கோயில்மணியமெனக்குடிகளைக்கெடுத்தேன் இந்த.

ந. பூவிலேபாவிஎன்றுபேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையும்செய்யுமார்க்கந்தனையடுத்தேன்
உன்னுமந்தனை
நாவிலேஎனதுபாவிலேசொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மாயவேஷங்காட்டிஎன்னைநான்கெடுத்தேன்
அநுதினமும்.

பாவமும்பழிகளுந்தாங்கினேன் - பெருங்
கோவமுங்குரோதமும்ஓங்கினேன் - புண்ணிய
ஜீவனஞ்செய்யாமல் தூங்கினேன் - நல்ல
பாவனஞ்செய்யும்வழிநீங்கினேன்
ஆவலாகப்பலர்பொருள் அபகரித்தேன்
காவலாநெறியைக்கடந்துசஞ்சரித்தேன். இந்த.

ஈ. வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன் பிறரிடத்தில்
வாங்கியபொருள்களைஈங்கிலைஎன்றுநான்மறைத்தேன் பஞ்சத்திலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில் நெல்லைக்கட்டிநிறைத்தேன் நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன் முதலினொடு
நேரவட்டிதனைக்கூட்டினேன் - வெகு
தூரம்அகவிலையைநீட்டினேன் - வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன் - உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந்தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம். இந்த.

---

## கஎ. இராகம்-சுருட்டி-திசிரஜாதி-ரூபகம்.

### பல்லவி.

தேவாதிதேவனே - தயை - தயைசெய்தருள்வாயே.

### அநுபல்லவி.

பாவஉடலம் எடுத்துநீளும்
பாதகனும்என்னைக்ஞளும்
பந்தப்பகைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்.
நிந்தைப்பழிமூடாமல்.
இந்தப்படிவாடாமல் தேவாதி.

### சரணங்கள்.

க. கற்பகோடிகாலம்போல அற்பவாழ்வினைமதித்தேன்
காரமாகஎந்நேரமும்அகங்காரமும் நெஞ்சினிற்பதித்தேன்
தற்பராஉன்பொற்பாதம்புயந்தாழ்ந்திடாதெனைத்துதித்தேன்
சாந்தமாம்யோகாந்தமார்க்கஞ் சார்ந்திடாமற்குதித்தேன்.

நற்பதந்தனைநாளுஞ்சார்ந்து
நாசவினைகள்யாவுந்தீர்ந்து
ஞானந்தனிலேநீட
மோனந்தனையேநாட
வானந்தனையேதேட
ஆனந்தமுமேகூட. தேவாதி.

உ. பாசமாய்பிசாசம்என்மனம்வாசஞ்செய்வதுமிலையே
யாபமுங்கடுங்கோபமும்பலர்சாபமும்பெருயலையே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக்கிலையே
நிந்தையான அகந்தைமூடும் என்சிந்தையுங்கடுஞ்சிலையே.
ஈசனேஎன்பாவம்நீக்கி
என்னையேஉன்தாசனாக்கி
இன்பக்கடலேசேரத்
துன்பக்கடலேபேர
அன்பர்க்கினமேசார
என்பொய்க்குணமேதீர. தேவாதி.

ங. அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும்ஆனந்தப்பெரும்நதியே
அனவரதமுங்கனவிரதர்கள் அகத்தில்ஒளிருமதியே
துன்பசாகரம்என்பதுகெடத்தோன்றிடும்பரகதியே
தொண்டன்வேதநாயகன்மனப்பெண்டகமகிழ்பதியே,
நின்பதந்தனைநாளும்ஏத்தி
க்ஷேமமாய்க்கவிமாலைசாத்தி
நீதிப்பயனேவிள்ள
ஆதிப்பழியேதள்ள
வேதப்பயனேகொள்ள
போதத்தினிலேதுள்ள. தேவாதி.

---

## க௮. இராகம்-பியாகு-ரூபகதாளம்.

### பல்லவி.

இந்தநிமிஷமேபாபநிவர்த்தி
எனக்கருள்வாய்ஸ்வாமி.

### அநுபல்லவி.

எந்தநிமிஷத்தில்சாவுவருமோவென்
றேங்கியேநான்பயந்தேனே - உயிர்
நீங்கிடிலென்னசெய்வேனே - சுரர்கோனே இந்த.

சரணங்கள்.

க. காலையோமாலையோநானையோசாவெனுங்
காலக்கணக்கறியேனே - வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன்சிறியேனே - என்னை
ஆண்டாலுனைப்பிரியேனே - பெரியோனே இந்த.

உ. பொட்டென்றுதேகந்தான்சட்டென்றுவீழ்ந்திடில்
கிட்டஒருவர்கில்லாரோ - குழி
வெட்டென்பர்பிரேதத்தைக்கட்டென்பர் மண்ணைமேற்
கொட்டென்பர்போவர்பொல்லாரோ - ஆன்ம
நட்டம்வராமற்கண்பாரோ - துயர்தீரோ. இந்த.

ங. கப்பல்இல்லாமலேஎப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணுதே - நாளும்
அப்படிநின்பதத்தெப்பமில்லார்க்கந்த
ஆநந்தவீடுநண்ணுதே - நல்ல
ஞானந்தருவாயிப்போதே - கைவிடாதே. இந்த.

ச. ஆதிமத்தியாந்தரகிதப்பிரபோத
அபேதபுராதனநாதா - நாளும்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா - எனக்
கமலந்தரஇன்னம்வாதா - கிடையாதா. இந்த.

---

## கக. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தஉபகார மறவேனே - பூமி
அந்தரம்எங்கும் நிறை - கோனே. இந்த.

அநுபல்லவி.

விந்தைநரஜன்மம்நான் மேவஅருள்நோக்கினாய்
தந்தைதாய்மனைசேயர் தந்துகுறைநீக்கினாய். இந்த.

க. குருதியாகியசேறு கூட்டி - நல்ல
கொழுமாமிசச்சுவரை நாட்டி
வரிஎன்புவிட்டங்கள் பூட்டி - கட்டும்
வடமாநரம்புகளை மாட்டி

இருகாலில்நவவாசல் உடல்மனையை வீக்கினாய்
இன்பங்கள் நுகரஐந்திந்திரியம் ஆக்கினாய்
அரியஆன்மா அங்குகுடியுறப் போக்கினாய்
அந்த ஆன்மாவில்நல் லறிவினைத் தேக்கினாய். இந்த

உ. பூமியாகியவீ டமைத்தாய் - பஞ்ச
பூதாதிஊழியர் சமைத்தாய்
பூம்துர உணவுகள் கொடுத்தாய்-அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்

சோமசூரியதார காதீபம் ஏற்றினாய்
சுகவாயுவால்உஷ்டண சோகத்தை மாற்றினாய்
சேமஉணவாக்கவேதேயுவினை ஆற்றினாய்
சீதக்கடங்கொண்டுதெண்ணீரை ஊற்றினாய். இந்த.

ங. கடலாறுகுளம்ஓடை தந்தாய்-மலர்க்
காவுகளும்உதவினை யெந்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய்-வனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்

இடமானநவமணிஉலோகாதி நீட்டினாய்
ஜெகஜோதியாகவேசிங்காரம் நாட்டினாய்
அடமின்றிநானாவிநோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும்இன்பங்கள் ஊட்டினாய். இந்த.

ச. சிலபறவைகானஇசை பாடும்-வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்நரர்வேலை புரியும்-நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்

மலர்கனிகள்காய்கிழங்குமரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்துவயிறூரஊட்டுமே
சலதரமுமெங்களைத்தலைமுழுக் காட்டுமே
சர்வபொருள்களும்நல்லசந்தோஷம் மூட்டுமே. இந்த.

ரு. பித்தர்க்குநீசெய்பா ரகமே - வளம்
பெரிதெனினுமீதற்ப சுகமே
சுத்தர்க்குநீசெய்பே ரகமே - பரம
சுகமெனவிரும்புமென் அகமே

பக்தர் அநுகூலநற்பரமகா ருண்ணியனே
பகிரண்டகோடிகள்பரித்திடுந் திண்ணியனே
வித்தகசொரூபமேமேவு நற்புண்ணியனே.
வேதநாயகன்உள்ளமீதுவளர் கண்ணியனே. இந்த

உ௯. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தைக்குள்உறைந்தும்நீ சிந்தைத்துயரந்தனைத்
தெரியாயோஸ்வாமி. சிந்தை.

அநுபல்லவி.

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே. சிந்தை.

சரணங்கள்.

க. பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகத்தையுந்துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வச மாயினும்வேறொரு
புவனத்தையும்பிடிக்க நோக்குமே
காலமுழுதும்இந்தக் கருத்தேயாதனுரூபம்
கலியாணவீட்டிலும் கட்டிக்கொண்டழும்சோபம்
மேலவனேஎனக் கிதுவாய்த்ததென்னபாபம்
வேதநாயகனேபா ராயோஎன்பரிதாபம். சிந்தை.

உ. இருதலைக்கொள்ளிநடு விருக்கும்எறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணாகிய உதரக்குழி அடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே
தரணியின்வாழ்வென்பது தானே விஷவிருக்ஷம்
சார்வதாஇதில்வரும் சங்கடம் கோடிலக்ஷம்
தருமயோகாந்தநிலை சார்தல் உத்தமபக்ஷம்
சர்வாநுகூலாஉனக் கெல்லாம் பிரத்தியக்ஷம். சிந்தை

ங. போர்க்களநடுவிலே குடியிருப்பதுபோலப்
புலச்சத்துருக்களின்போ ராட்டமே
சேர்க்குந்தசைவடிவாந் தேகமிதுபிணியுந்
தீவினைகளும்வளர் தோட்டமே.

பார்க்குள் இதுவேஆசா பாசநடனசாலை
பகலும்இரவும்இது படியுமேமோகவேலை
தீர்க்கவைத்தியர்க்குத் தினமுங்கொடுக்கும்வேலை
தினம்வேதநாயகா சேர்ந்தேன்உன் திருக்காலை. சிந்தை.

---

உக. இராகம்-யமுனாகல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

சரணம்சரணம் நாதா - உன்
சரணம்தரவேண்ணுநாதா சரணம்.

அநுபல்லவி.

திரணமாகிய காயமே - இதில்
தினம்அனந்தம் அபாயமே
மரணம்வருமுன் னேயமே - பெற
மகிழ்ந்தருள் சகாயமே - கோடி. சரணம்.

சரணங்கள்.

க. பாவியேன் இருதயமே - பல
பாதகங்களின் மயமே
மேவிடுந்துர்வி ஷயமே - வினை
விலக்கிஅருள்நன் னயமே.

மாவினைகளைமாற்றுவாய் - எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தேற்றுவாய் - இந்தத்
தீயனைக்கரை யேற்றுவாய். சரணம்.

உ. மதம்இராகதுவேஷம் - பொய்
வஞ்சகம்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம் - எனக்
கில்லைபுண்ணியவி சேஷம்.

மதனப்பேயை ஓட்டுவாய் - நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனநரகைப் பூட்டுவாய் - உன்
வீட்டுக்குவழி காட்டுவாய். சரணம்.

௩. தாசர்கள்பரி பாலா - கன
சாத்விககுண சீலா
நீசர்கள்பிரதி கூலா - சத்ய
நீதியுறுசெங் கோலா
ஆசறுமுதல் நூலனே - அகி
லாண்டகோடிவி சாலனே
நாசரகித மூலனே - வேத
நாயகன் அநு கூலனே. சரணம்.

---

உஉ. இராகம்-கற்கடா-ஆதிதாளம்.

பல்லவி.

சீலம்நீதா தேவநாதா
சிறியன்மீது வாதா அபேதா. சீலம்

அநுபல்லவி.

மூலகாரண தயாபரவேதா
மோக்ஷசாம்பிராச் சியப்பிரதாதா சீலம்.

சரணங்கள்

௧. நன்மைநின்மைஇன்ன தென்பதுதெரியேன்
ஞானமார்க்கந்தனை யேஅநுசரியேன்
சின்மயாநந்த னேஜெபம்புரியேன்
தீயுனனான் பாபத்திற்பெரியேன். சீலம.

உ. தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமிநீஎன்மனம் வாழவும்வரியோ
நீயிருக்கஎன்தன் அன்பம்உபரியோ
நீயேதாமசிக்க என்னுடல்கிரியோ. சீலம்.

௩. ஜீவசிஷ்டிஸ்திதி லயஅதிகாரா
ஜென்மசாபல்லியப்பிர தானஉதாரா
தேவதேவகன பூசிததீரா
சிறியன்வேதநா யகன்உபகாரா. சீலம்.

---

## உ௩. இராகம்-உசேனி-ஆதிதாளம்.

### பல்லவி.

நின்பதமேதுணை ஐயா - மனத்
துன்பம்அகலஅருள் செய்வாய். நின்.

### அநுபல்லவி.

இன்பமகோததியே - இனியதயாநிதியே
அன்பர்பரகதியே - அமரர்க்கதிபதியே. நின்.

### சரணங்கள்.

க. என்மனம்இளகாத பொருப்பே - மாயை
என்றைக்கும்அதிற்குடி யிருப்பே
தன்மமேஅதற்கரு வருப்பே - கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும்இச்சை நாசக்கொடுநெருப்பே
தின்மையெல்லாம்அகலத் திருவருட்கண்திருப்பே, நின்.

உ. ஏதும்அறியேன்ஞான சாஸ்திரம்-புவ
னேசாஉனக்குநான்எம்மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் - அதி
தூயனேஎன்இன்னம் க்ஷாத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறவேநீ தருவாய்மெய்ஞ்ஞானநேத்திரம். நின்.

௩. நீசனென்வினைக்கெல்லா மூலம் - என்தன்
நெஞ்சஞ்செய்வதும்பிரதி கூலம்
பாசபந்தஉலக ஜாலம் - தன்னில்
படிந்துநொந்தேன்பல காலம்
ஈசனேகேளாயோ ஏழைநானிடும்ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள்சீலம் நின்.

---

## உ௪. இராகம்-முகாரி ஆதிதாளம்.

### பல்லவி.

ஆள்வாயெனதுள மூள்வாயெனக்குன்தன்
அடியிணையேதுணையே. ஆள்.

### அநுபல்லவி.

நீள்சுகக்கனியனே நேசருக்கினியனே
நாள்வளர்தனியனே நயமறைத்தொனியனே. ஆள்.

சரணங்கள்.

க. பேதைநான்பயனில்லாப் பேச்சிற்சண்டப்பிரசண்டம்
பிறரைமயக்குவதிற் பெரியஉற்பாதபிண்டம்
வேதைவினைஎனக்கு விளைசருக்கரைக்கண்டம
விரைந்தருள்புரிஉனக்காயிரங்கோடிதண்டம்
வேதனே-வரப்பிர-சாதனே-ஆசீர்
வாதனே-சுரர்புகழ்கொள்-காதனே-நாதனே-எனை. ஆள்.

உ. மனமெனுங்குரங்குக் கனஅறமேஉபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் ஏதின்னமும்பரீக்ஷை
தினகரரூபனே திவ்யமெய்ஞ்ஞானதீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎனதபேக்ஷை
தேவனே-மனோ-பாவனே-மறைசொல்
நாவனே-தயைநிறை-சுபாவனே-ஜீவனே-எனை. ஆள்.

ந. நிகரில்கனதெய்விக நின்மலசுலக்ஷணா
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப்பிரதக்ஷணா
சகலஜீவாத்மகோடி தாங்குசம்ரக்ஷணா
சாஸ்திரம்புகலும்சுரர் ஸ்தோத்திராமிர்தபக்ஷணா
தாங்குவாய்-நெஞ்சில்-ஓங்குவாய்-துயரம்
நீங்கவே-வேதநாயகன்-பாங்கர்நின்றனுதினம். ஆள்.

---

## உரு. இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

தேவநாயகனே-என்மீதிலுன்
திருவுளம்இரங்குவையே. தேவ.

அநுபல்லவி.

ஜீவன்முக்தியூர்ஜித - சீலர்பிதுரார்ஜித
தாவில்அதிபூஜித - சர்வசமயயோசித. தேவ.

சரணங்கள்.

க. கரதலாமலகம்போல் உனக்குயாவுந்திர்ஷ்டாந்தம்
கர்த்தனேஅறியாயோநீ எனதுவிர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றுல்பாலகர்க்கும்ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயைபண்ணாயேதோனித்தாந்தம்
பற்பல-நற்பல-உற்பவ-விற்பன
கற்பனை-செப்பரும்-அற்புத-உற்பன. தேவ.

உ. தனமிகவேண்டுவோர்க்குச்சல்லியோடுதானமே
தாகமுள்ளோர்க்குக்கானல்ஜலமதுபானமோ
கனசுகந்தேடெனக்குக்கவலைசன்மானமோ
கதியருள்வாயுனக்கதுபராதீனமோ.

கர்த்த-சமர்த்த-பிரசித்த-சம்வர்த்தன
பக்தர்கள்-சுத்த அகத்துறு-நிர்த்தன. தேவ.

௩. தினமும் அனந்தம்பாவஞ்செய்வதென் சம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்புசேர்வேப்பிலைக்கஷாயம்
இனவேதநாயகனென்றேற்றேன் உன்னுமதேயம்
எனக்கல்லாவிடினும் அப்பெயர்க்கேனுஞ்செய்சகாயம்

எம்பர-உம்பரும்-அன்பரும்-நம்பிய
அம்பர-சம்பிரம-இன்பம்-நிரம்பிய. தேவ.

---

உ௬. இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசாநின்பொற்பாதமலர் நம்பினேன் - என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள். ஈசா.

அநுபல்லவி.

தாசர்மனகம லாசனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசுர
ஆசைக்கினிய அவாங்மனோகோசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர. ஈசா.

சரணங்கள்.

க. எத்தனையோபேர் சுகித்தமர்வீட்டில்
எனக்கிடம் பூச்சியமா - தயை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா - நல்ல
நித்தனே இன்ப மிகுத்தமுத்திநலன்
நீதரில்வானவ ரோதுவரோகலன்
சத்தில்வழக்கவர் பேசிஎன்னபலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறிலன். ஈசா.

உ. மாகுணபாக சையோகமின்றிப்புவி
வாழ்ந்தவர் தாமெவரோ - எங்கும்
ஏகும்நெஞ்சுன்னரு காகவராகிதற்
கேகுறுக் குச்சுவரோ - விஷ
நாகமாமாயைக்கெங்குஞ் சர்வகொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிடுங்கிள்ளையோ
ஆகிலுமென்புத்தி தான்சுத்தவெள்ளையோ
ஐயனே நானென்ன தாயில்லாப்பிள்ளையோ. ஈசா.

௩. வந்துன் தரிசனந் தந்தருளிலென்
மனக்குறைதீரோனோ - உன்தன்
சுந்தரபாதமென் சிந்தையூன்றிற்
சுகக்கடல் சாரோனோ - பெரும்
பந்தநெருப்புக்கென் சிந்தைசெத்தையா
பாவியென்றென்னைக்கை நீவிடில்சத்தையா
விந்தைநலந்தந் திடல்பெருவித்தையா
வேதநாயகன் பங்கென்னசொத்தையா. ஈசா.

உஎ. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்

பல்லவி.

ஆதியேபரஞ்சோதியே - எனை
ஆதரித்தருள்வாயே. ஆதியே.

அநுபல்லவி.

ஓதிஉணரஒண்ணு தோங்குங்குணாகர
நீதிவடிவமுறு நின்மலசாகர. ஆதியே.

சரணங்கள்.

க. உலககாரியத்தில் நான்வெகுதிராணி - உன்னை
உன்னுவதிற் கேவலம்அப்பிராணி
நலம்என்பதெனக் குண்டோமாகாணி - என்தன்
நவைஏற்றப்போதுமோ ஆயிரந்தோணி
மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
மதிக்கும்அடியார்கள் துதிக்கும்ஆரிய
கதிக்குநானென்ன உதிக்கும்வீரிய. ஆதியே.

உ. கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி - சீவன்.
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்கு ஞான அரசாட்சி - மிக
வாய்க்கும்படி ஐயனேநீகடாட்சி
எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபர ஆகியே.

ங. தீதுபொறுத்தல் தெய்வகுலதர்மமே - தீய
செய்கைகளே மனுஷகுலகர்மமே
ஓதிவிட்டேன்உனக் கென்உள்மர்மமே - என்மேல்
ஓவோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம
கடந்தஞானியர் தொடர்ந்தசம்பிரம ஆகியே.

---

## உஅ. இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

### பல்லவி.

தேவனேஉன்னைநம்பினேன்
அடியேனை ஆண்டருள். தேவனே

### அநுபல்லவி.

தேவா - துரித - அபாவா - சுகுண - சுபாவா
மகாநு - பாவா - வாவா. தேவனே.

### சரணங்கள்.

க. ஐயாநிலை அறு - பொய்யாம்உலகினில்
மையாவகை அருள் - செய்யாயோஉயர். தேவனே

உ. வாராயோமுகம் - பாராயோஅருள்
கூராயோவினை - தீராயோகன. தேவனே.

ங. பெரியாய்கைவிடல் - சரியாநான்வினை
புரியாவிதம்அருள் - சொரியாயோஉயர். தேதனே.

௪. நொந்தேன்வினைசுட் - வெந்தேன்உனதிடம்
வந்தேன்சுகமிலை - தந்தைஅருள்புரி. தேவனே.

௫. நாதாஅருளைஒண் - ணுதாயனம்இரங்
காதாஅநுதினம் - வேதநாயகன்பணி. தேவனே.

---

## உ௯. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

பரனேஅடியர்மனோ - கரனேகமலதின
கரனேநீஅருள்வரனே.

### அநுபல்லவி.

உரனேமிகும்புவன தரனேஅகண்டசரா
சரனேபரமசுக கரனேதீரனேஅரும். பரனே.

### சரணங்கள்.

௧. என்னைவந்திரக்கும்ஏழை தன்னைநான்தள்ளிவிடில்
ஈசனேகோபம்பண்ணுயோ - தந்தை
அன்னையேஉனையிரக்கும் என்னைநீதள்ளில்எனக்கும்
அவ்விதமென்றேஎண்ணுயோ
முன்னைநீஅனேகரைஉன்பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப்பின்னும்வினைதீர்த்தனை
என்னவேநான்கேட்டேன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன்அருள் உன்னையிதென்பிரார்த்
[தனை. பரனே.

௨. உத்தமனேநான்பெரிய பித்தனுயினும்உனை
அடித்தவனெனஉன்னுயோ - பாரில்
சித்தமிசைபைத்தியமிகுத்தபாலகனைக்கை
விடுத்தகலுவாளதாயோ
முத்தொழிலில்முதல்தொழில்கொண்டுசெய்தாயென்சடம்
மூத்தஞானம்அளித்தெனைக்காத்தருளாயேன்ஹடம
அத்தனேஅவ்விரண்டாந்தொழிலில்என்னசங்கடம்
அதுதரில்மூன்றாந்தொழிற்கஞ்சிடேன்இதுதிடம். பரனே.

ங. பாடுகவியிற்கற்பனை தேடுவதல்லால் உன்னருள்
கூடும்வகைகுறியேனே - என்னை
நாடும்எவரோடுமேவாதாடுவதல்லால்என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலிற்பாதமலர்சூடுபெரியோரக
வாசபுவனேசவளர்பாசவினைமாரக
வீடுதவுகியாக அலையாடுகெடற்பாரக
மீதுவேதநாயகன்எப்போதுமேகொள்தாரக. பரனே.

---

## ௩௰. இராகம்-பியாகடை-திரிபுடைதாளம்.

### பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா - பரலோகசாதக
சம்பிரமத்தைவிரும்பினேன்மெய்யா.
கனதியாகக்கையா. அம்புய.

### அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறில்லையே - தேவாதிதேவர்கள்
சகிதமாகியசுகிதமாமலையே - மெய்ப்போதகிலையே. அம்புய.

### சரணங்கள்.

க. தினமும்அலையுமென் மனமேகீசகமா - அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅதீதனென் மீதரோசகமா - என்சொல்உன்காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நானொருமசகமா. அம்புய.

உ. மண்ணின்வாழ்க்கையில் எண்ணியாதனையே - அதுநீங்கவேயரு[ள்
மன்னிடாமலேன் இன்னஞ்சோதனையே
திண்ணியம்பெறு புண்ணியசாதனையே - அடியேனுக்கேஸ்வா
தீனமாகச்செய் ஞானபோதனையே
செய்தேன்வந்தனையே. அம்புய.

ங. எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே - பரிசுத்தசீலர்கள்
இஷ்டபூரண துஷ்டநிக்கிரகமே
விண்ணினோர்தினம் நண்ணுசுகக்கிரகமே - இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுக்கிரகமே
பணியார்உக்கிரகமே, அம்புய.

## ௩௧. இராகம் ஆகிரி-திரிபுடை தாளம்.

### பல்லவி.

சம்மதிஎனக்குமெய்யனே - உனைநினைக்க
நன்மதிதந்திடில்ஐயனே.

### அநுபல்லவி.

அம்மவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும். சம்மதி.

### சரணங்கள்.

௧. தன்னைஉன்னவே கூடாதென்றே - தடைசெய்வோன் தான்
இந்நிலத்துண்டோ குணக்குன்றே
நின்னையே தொழவிரதம்
நேர்ந்தனே அநவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கியொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும். சம்மதி.

௨. பதமலர்மேல் ஆசைகொண்டேனே - உலகவாழ்வு
சதமலவென் றுண்மைகண்டேனே
நிதமுனைப் பணியுமதி
நீதரஇல்லையோவிதி
அதிற்குறையுமோ உன்நிதி
அண்டினேனு னுன்சந்நிதி
அடரும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படருமனத்துயர்க் கடலில்ஆழினும். சம்மதி.

௩. உத்தமபிரம சைதன்னியமே - சௌஜன்னியமேமெய்ப்
பத்தர்கள் அல்லா தார்க்கன்னியமே
சுத்தமதுர பாஷணா
சோபனகுண பூஷணா
வித்தகசுவி சேஷணா
வேதநாயகன் போஷணா
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமாவே பலர்கள்பகைக்கினும். சம்மதி.

## ௩௨. இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே - உயர் - மெய்யனே.

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை. ஐயனே.

சரணங்கள்.

௧. ஈசனேநான் ஆத்ம இரக்ஷண்ணியமே - பெற
இரங்கியருள் கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமே - கொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே. ஐயனே.

௨. இதநிதி அழிந்து போம்நில்லாது - அதை
ஈந்தனம்போது மென்றுல்செல்லாது
நிகழ்நித்தியசுகந் தந்தால் அல்லாது - சற்றும்
நில்லாமல்நச்சும் என்வாய்பொல்லாது. ஐயனே

௩. கோதையர்மைந்தர் முதற்பரிஜனமே - சந்தைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுங்கரிசனமே
வேதைதரும்இது நிதரிசனமே - அருள்
வேதநாயகனுக்குன் தெரிசனமே. ஐயனே.

---

## ௩௩. இராகம்-ஜயந்தஸ்ரீ-ஏகதாளம்.

பல்லவி.

நாதாநிரந்தர விநோதா - உன்தன்
பாதாரவிந்தம்எனக் காதாரம்தாதா. நாதா.

அநுபல்லவி.

வேதாந்தசார நயபோதா - பஞ்ச
பூதாந்தகால விபரீதா - பிரக்கியாதா - ஜெக. நாதா.

சரணங்கள்.

௧. பேசருஞ்சர்வ புவநேசா . நல்ல
தாசர்மனாலயவாசா - பவநாசா - ஜெக. நாதா,

௨. மாவரந்தரலாகாதா - வினை
போவெனநீசொலிற் போகாதா - சாகாதா-புவி. நாதா.

௩. மாயையின் சபதமேசியா - அந்தப்
பேயைக்கொல்வ துனக்கவசமா-தாமசமா-தெய்வ. நாதா.

௪. அடியன்மனங் கடினஇரும்பா - அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா-நானோர் துரும்பா-ஜெக. நா.

௫. ஆதிமத்திய அந்தரகிதா - சய்ஞ்
சோதிமய அமரர்சகிதா-கனசுகிர்தா-மகி. நாதா.

௬. மாயாந்தகாரம் அகல்கிரணு - வேத
நாயகன்தொழு மலர்ச்சரணு-அந்தக்கரணு-தெய்வ. நாதா.

---

## ௩௪. இராகம்-புன்னுகவராளி-ஆதிதாளம்.

### பல்லவி.

காக்கவேண்டும் - கடவுளே - நீ காக்கவேண்டும்

### அநுபல்லவி.

காக்கவேண்டும் எனை அன்பன்-ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும் பாவமெலாம்-போக்கவேண்டுமினமெனைக். கா.

### சரணங்கள்.

௧. பண்ணியவினையுமனம்-எண்ணியவினையும்வாக்கில்
நண்ணியவினையுந்தீரக்-கண்ணியவரந்தந்தெனைக். காக்க.

௨. ஆரணனேநீகொடுத்த - தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பவகி. வாரணசுகந்தந்தெனைக். காக்க.

௩. எந்தவேளைமரணமோ - அந்தவேளைவந்துன் அர
விந்தமலரோகிகருஞ்சு- சுந்தர அடிதந்தெனைக். காக்க.

௪. பூதமுதலானஜீவ - பேதகாரணனேநாளும்
வேதநாயகன்பணிபிரக் - கியாதபூரணனேஎனைக். காக்க

## ௩௫. இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்.

### பல்லவி.

ஈசனேமல-நாசனேமன-வாசனேபிர-காசனே.

### அநுபல்லவி.

பாசஇருளினை நீக்குவாய் - உன்தன்
பதத்துக்கெனைஉற வாக்குவாய். ஈசனே.

### சரணங்கள்.

௧. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே - அதன்
செயலெல்லாம்அலங் கோலமே
குறிகொள்பாச நிர்மூலமே - செய்து
குணந்தந்திட இதுகாலமே
அறியநானிடும் ஓலமே - செவிப்
பொறிகொண்டுத வனுகூலமே. ஈசனே.

௨. அட்ருங்காமங்கொள் பேழையே - நிகர்
ஆகும்உடலெனும் பாழையே
இடமென்றுன்னும்நான் ஏழையே - குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே - உயர்ந்
திடுமுன்தொலைபவப் பீழையே. ஈசனே.

௩. என்னைக்கெடுத்திடக் கச்சையே - இடை
இறுக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருத்திடக் கொச்சையே - கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத் தியாகமழைபொழி
பன்னும்வேதநா யகன்வெவ்வினையொழி. ஈசனே.

---

## ௩௬. இராகம்-ஆநந்தபைரவி-ரூபகதாளம்.

### பல்லவி.

நிரந்தரனே - மா - துரந்தரனே - கன
நிர்மலதத்துவ - தர்மகர்த்தத்துவ. நிரந்தரனே.

### அநுபல்லவி.

பரந்தபேரருள் - சுரந்துகாத்தருள்
வரந்தந்தென்வினை - விரைந்துதீர்த்தருள், நிரந்தரனே.

சரணங்கள்.

௧. சித்தமிரங்கிளள் எத்தனைதீதையை
செய்யிற் பிழையேனோ - கன
நித்தனேஎன்பிழை எத்தனைஎன்னினும்
நீங்கித் தழையேனோ - நல்ல
உத்தமம்என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்றோபலவிதம் என் துர்ச்சரித்திரம்
நித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீக்கிஎனைச்சேர் சௌபாக்கியசமுத்திரம். நிரந்தரனே.

௨. உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே - என்தன்
மதியொன்றேஅந்த விதியைக்கடந்து
வளர்க்கு மாபழியே - இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
பதிதனெனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவனனீயென ஈவாய்அத்தாக்ஷியே. நிரந்தரனே.

௩. பாரிருள்நீக்காத சூரியனாலேஅப்
பாருக்கென்னசாரம் - ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம் - நாளும்
சாரமில்லாச் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் தீராவியாகுலம்
வீரனேநீயறிவா யென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம். நிரந்தரனே.

---

## ௩௭. இராகம்-ஆநந்தபைரவி, ஆதிதாளம்,

பல்லவி,

அப்போதுனைத்தொழல் அரிதையா - உனை
இப்போதேதொழ அருள்செய்யாய்.

அநுபல்லவி.

முப்போதும்உணரு முதலேசுரர்தொழும்
அப்பாமரணம்உற் றடியேன்உடல்விழும். அப்போ.

சரணங்கள்.

௧. திடமார்பிற்பாறைபோலே திரண்டுகோழைகள்கட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திறுகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஓடிமுட்டும்
பாரிதுவேளையெனப் படுமாயைதொடைதட்டும்
பலங்கொள்உணர்வது கலங்கிகிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும். அப்போ.

௨. மனைவிசெய்கடன்காரர் மண்டிவார்த்தைவிரிப்பார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார் [பார்
வகையொன்றுமின்றேற்கையால் மணித்தொண்டையைநெரிப்
மடங்குகழல்கர முடங்குசெயலொடு
இடங்கொள்கரணமும் அடங்கிமாளுறும். அப்போ.

௩. அழுகைக்குரலும்பல முழக்கமும்நாளுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடனுதம்
விழுகையுறும்உடலின் வேதனையுமபிரமாதம்
வேதநாயகனே அப் போதுனை உன்னலேதம்
விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவொடு யரிக்கும்வேளையில். அப்போ.

---

## ௩௮. இராகம் காம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

எவ்வகையிலும் நானே-நல்வழிபற்றி
உய்வகை அருள் கோனே.

அநுபல்லவி.

செவ்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும்பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே. எவ்வ.

சரணங்கள்.

௧. வுயிர்க்கிடவென்றுலென் குறியங்ககளிற்சூலை
வாங்கநீட்டின்உலகும் வானமும்எந்தமூலை
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதைஎன்பிழைஎழு திடவேண்டுங்கோடியோலை. எவ்வ

௨. நல்வழிநடக்கவென் றால்இருகாற்குந்தளை
நாளுந்தூர்வழிநடப் பதில்எனக்குண்டோகளை
புல்வினையேன்செவி பொய்கள் நுழையும்வளை
புண்ணியோபதேசமென்றால் புகஅதில்ஏது துளை. எவ்வ.

௩. உன்னைத்துதிக்கவென்றால் உலகில்என்வாய்க்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புமுழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே. எவ்வ.

---

## ௩௬. இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

### பல்லவி.

கதியிதென்முகம் பாரையா
கதிநினையன்றி ஆரையா.

### அநுபல்லவி.

மதியுள்ளோர்கள் சுகிக்கும்அமிர்த
வாரியேஅருள் மாரியே. கதி

### சரணங்கள்

க. உனக்கென்எண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்கக்ஷய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத ஞானசாகரா-குணாகரா. கதி.

௨. அதஞ்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென் பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்தொண்டோ
நீயல்லாற்கதி வேறுண்டோ
பதகமலங்கள்பரவும்பத்தர்கள்-பாக்கியமே-மனோக்கியமே. கதி.

௩. அனைக்குப்பிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான்முதற் பாதமா
விலக்கஇன்னம் விவாதமா
நினைக்கும்வேத நாயகன்பணி-நீதனே-பிரபோதனே. கதி.

## ௪௰. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

### பல்லவி

ஜாலஞ்செய்வதேதோ ஐயா
சீலம் ஈயொண்ணுதோமெய்யா. ஜாலம்.

### அநுபல்லவி.

ஞாலமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில் லார்க்குவெய்யா.

### சரணங்கள்.

௧. பெண்பிள்ளை யோடினமே
பேய்ச்சுரா படர்வனமே
அண்டும் இவரால்தினமே
ஐயையோ நொந்தேன்மனமே. ஜாலம்.

௨. பாழுமனமே மற்கடம்
பண்ணும் அகடவிகடம்
ஊழ்வினை தரும்சங்கடம
ஒழித்துநீ யருள்வாய்திடம். ஜாலம்.

௩. நீதிவழுவாச் செங்கோலா
நித்திய சங்கீதலோலா
வேதியர் பரவுஞ்சீலா
வேதநாயகன்சேர்காலா.

---

## ௪௧. இராகம்-சாமா-திரிபுடைதாளம்.

### பல்லவி.

வேதநாயகனே எவ்விதமும்உன்
பாதமலர் அருளே.

### அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய. வேத.

### சரணங்கள்;

௧. எண்ணுமனமேதுர்க் குணங்கொள்பாண்டம்
ஏதும்அறிகிலன் ஞானகாண்டம்
பண்ணும்பாவங்களே பிரமாண்டம்
பகரும்வார்த்தைகளே அபாண்டம். வேத

உ. மண்ணில் அநுதினம்பூததேகம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தியோகம்.
புண்ணியஉடல் வளர்த்திடும்வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம். வேத.

௩. விதநவிஷதருகி ரகஸ்தாச்சிரமம்
விரும்புவோர்க்கிதில் விலகிடாச்சிரமம்
நிதங்கொண்டேன் இந்தவாழ்விலேபிரமம்
நீங்கவேதநாயகனே அருள்கிரமம். வேத.

---

## ௪உ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

எனக்குக்கட்டியவீட்டை - எனக்குக்கொடாதிருப்ப
தென்னஞாயம்ஸ்வாமி.

### அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடு செய்தெங்கள்நிமித்தமே
என்றுநீசெய்ய வில்லையோவாக்குத்தத்தமே
உனக்குநான்பிள்ளை யென்பதுலகப்பிரசித்தமே
உவந்துகேளாயோ என்பிரலாபசத்தமே. எனக்கு

### சரணங்கள்.

க. சித்தவிகாரமுறு நரர்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ள தெனில்கோனே - நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வ தெப்படிநானே
சுத்தமணிபொன் அங்கேதரும்புகள்ஈட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் துன்பம்போல்ஓட்டமே
அத்தமியாநித்திய சூரியர்அன்பர்கூட்டமே
அநுதினம்எனக்கந்த வீட்டினில்நாட்டமே. எனக்கு.

உ. முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமோ - இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாத அந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

அகமிசைஉன்னஉன்ன ஆனந்தப்பொங்குமே
ஆயிரங்கோடிசூரியர் ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள் தங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே. எனக்கு.

௩. இகமனைகட்டிநரர் கும்பப்பிரதிஷ்டைசெய்த
இணையறும்எந்தாயே - நித்திய
சுகமனைதன்னில் பிரவேசிக்கவேநல்ல
சுதந்தரம்அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமநித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரறுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே.

---

## ௪௩. இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஐயனே உன்அழகைகாண
ஆசைகான் கொண்டேனே. ஐயனே.

### அநுபல்லவி.

வையமீதுபல அழகையும்
வகைவகையா வகுத்துக்காட்டும்.

### சரணங்கள்.

௧. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோஉனை இனியே. ஐயனே.

௨. கனியுந்தேனும் பாலும்சீனியும்
கண்டும்கரும்பும் சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை. ஐயனே.

௩. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின்ஆலய மானஉன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி ஐயனே.

ச. அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக்கூட்டம்
விதியின் அவை செய்புன்னழகின்முன்
வெட்கிப்பஞ்சுபோ லோட்டம். ஐயனே.

ரு. சத்தஸ்பரி சரசரூபகந்தந்
தான் அல்லாத பொருளை
எத்தன்மைஉன துருவென்றறிய
இன்பக்காட்சி அருளே. ஐயனே.

சு. பதியில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கப்பார்க்க வடிவே
அதிசயம்தரும் உன்தன் அற்புத
அழகினுக்குண்டோ முடிவே

எ. பிறந்தநாள்முதல் தாயைக்காணாப்
பிள்ளை தன்னை ஒத்தேனே
சிறந்தவேத நாயகாஉன்மேல்
சிந்தையாவும் வைத்தேனே. ஐயனே.

---

## சச. இராகம்-மாஞ்சி-ரூபகதாளம்.

### பல்லவி.

என்னைநீ ஆளுவாய்-ஏகனே-யோகனே-என்னை.

### அநுபல்லவி.

பொன்னைமாதைப்பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம். என்னை.

### சரணங்கள்.

க. யாதனுசரீரமே - யாதுமில்லைசாரமே
வாதபித்தவிகாரமே - வாதனைகள் அபாரமே
மலநிவாரணா - வடிவபூரணா
நலஉதாரணா - ஞானகாரணா. என்னை.

உ. எந்நாளும்கிலேசமே - என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையைநாசமே - பண்ணிநீவாசமே
பதிதபாவனா - பரமஜீவனா
அதிகசோபனா - அகிலஸ்தாபனா. என்னை.

௩. அன்னை தந்தைநீ அல்லவோ-ஆயிரந்தரஞ்சொல்லவோ
என்னைமாயைகொல்லவோ - எங்குநான் இனிச்செல்லவோ ]
ஏதபேதகா - இனியசாதகா
வேதநாயகா - விமலதாயகா. என்னை.

---

௪௫. இராகம்-சைந்தவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்கலுண்ணுதா-இந்த-ஏழை.

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா. ஏழை.

சரணங்கள்.

௧. சாடும்பிரசண்டக் காற்றுலே - திசை
தப்பியேஅலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்ச மாலே என்னை
நைவிக்காவாடினே னுன்புவிமேலே. ஏழை.

௨. நீசெய்வதெல்லாம் சகாயம் - இங்கே
நிரந்தரம்என்செய்கை யாவும்அந்நியாயம்
ஈசனேநின்பத நேயம் - எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம். ஏழை

௩. அற்பசுகத்துக் குழைத்தேன்பாரில்
அநுதினம்ஆயிரம் பொய்சொல்லிபிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன் - தனப்
பாரம்பொருமலே பரிந்துன்னை அழைத்தேன். ஏழை.

௪. ஆன்மபத்தினி மணவாளா - அகி
லாண்டபிரமாண்ட அகண்டககோளா
வான்மகிழ் தீனதயாளா - தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றாளா. ஏழை.

---

## சசு. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

### பல்லவி.

கருணாகரப்பரம்பொருளே அடியனைக்
கண்பார்த்தருள்வாயே. கருணா.

### அநுபல்லவி.

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடியதேஜோமயம்ஆன. கருணா.

### சரணங்கள்.

க. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொற்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிறியேன்
ஈன்றவனீயெனு என்றுமேகூறியேன்
என்னசெய்வாயோ வென்றேங்கினன்சிறியேன். கருணா.

உ. தரணியில்நான்ஒரு தருவெனமுளைத்தேன்
தமகுணயாவுமே சாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வை யென்றஞ்சியேகளைத்தேன். கருணா.

ந. நிகிலலோகங்கட் கெல்லாநீயதிகாரி
நிச்சயமாஎன் மனம்நினக்கொருபாரி
அகிலந்தனிலேஅந்த மனம்அகங்காரி
அடக்கிஆளாவிட்டால் அழியாளோநாரி. கருணா.

ச. அழகுக்காலயமான அமிதசுந்தரமே
அன்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தரமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே. கருணா.

---

## சஎ. இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏனின்னம் தாமதமையா
என்னிடம்வர. ஏனின்.

### அநுபல்லவி.

தானேஉமக்கு முத்தித் தலமொன்றுமில்லையோ
வானமுத்தனைவிட்டு வரமனமில்லையோ. ஏனின்

சரணங்கள்.

௧. சூரியனைத் தூண்ட அகன்றீரோ - அந்தச்
சோமனுக்கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ - அதில்
பகல்இரவுண்டாக்க முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கற்பக்கத்தில்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ. ஏன்னி.

௨. அண்டகோடிகளைத் தூக்கினீரோ - நவம்
ஆகச்சில அண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ - கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும் வேலைகாட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச் சுவைகூட்டுகின்றீரோ
மலருக்குப்பலவண்ணந் தீட்டுகின்றீரோ. ஏனின்

௩. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ - அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள்இசைகேட்டுக் களித்தீரோ - நல்ல
தொண்டர்இதயத்தில் ஒளித்தீரோ
பரகிருபாகர பரஹிதநேசரோ
பரமதகண்டன பாபவிநாசரோ
சருவவிநோத சராசரவாசரோ
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரோ. ஏனின்,

---

௪௮. இராகம்-மத்தியமாவதி-ரூபகதாளம்.

பல்லவி.

இவ்வளவு தான்ஐயனே - அதிகம் அல்ல
இரங்கிநீ யருளமெய்யனே.

அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவ்வளவுமேதுன்பம் இல்லாமல்ஆதரி
இதயமலர்தரி - விதனமதுபிரி
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி, இவ்வளவு

சரணங்கள்.

க. எனைஎந்நாளும்நீ நீங்காதே - நான்போம்
இடமெங்குங்கூடவாபின் வாங்காதே
வினையனென்றென்மேற்கோபம் வீங்காதே - மன
வேதைசுமக்கஎன்னால் தாங்காதே
நினைவிலுந்தீதைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் பக்கத்தில்காத்திரு
நெடியநிலைபெறு - கொடியபிழைபொறு
அடியன்மனமுறு - கடியதுயர் அறு. இவளவு.

உ. மாயையில்மனமபுக ஒட்டாதே - என்னை
வஞ்சனைக்காளென்று சுட்டாதே
ஆயிரம்தண்டம் என்சொல்தட்டாதே - உன
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகைஅடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
நனவுகொடுகொடு - சினமும்விடுவிடு
தினமுமகிழ்வொடு - கனசுகுணம்இடு. இவளவு.

ந. நலமன்றிக்குறையை ஆராயாதே - பெரு
நன்மைகள்கொடுப்பதில் ஓயாதே
பலவேலைஇட்டேனென்று காயாதே - அற்ப
பாக்கியம்நான்கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசீலா
பூதபவிஷியவர்த்த மானமெனுந்திரிகாலா
போதமழைபொழி - மாதர்மயலழி
பாதகமதொழி - ஏதமறவிழி. இவளவு.

---

சக. இராகம்-சாரங்கா- அடதாளசாப்பு.

பல்லவி.

ஆதரித்திடநல்ல தருணம் - என
தையாஉனக் கனந்தஞ்சரணம். ஆதரி.

அநுபல்லவி.

பாதகநாசனே - பரமகிருபாசனே
சாதகமோசனே - தர்மப்பிரயோஜனே. ஆதரி.

சரணங்கள்.

க. என்பழிமறைப்பதில் யானையதப்பாதாளம்
இதரர்பழிதூற்றலில் என்வாய்பெரியமேளம்
அன்பினமனப்பேராசை அம்புவியினும்நீளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பெரும்வேதாளம்
ஆட்டிமாயல்வலை - பூட்டிஅநுதினம்
கோட்டிசெயும்வினை - ஓட்டிஅடியனை. ஆதரி.

உ. ஓடிஅலையநெஞ்சுக் குலகமும்வானும்அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதேஎன் சிந்தனையின்சங்கற்பம்
திருத்தமுடனேஎன் - கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து - வருத்தந்தொலைத்தெனை. ஆ.

ங. என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைகாணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறாதீர்க்கமோனம்
வாதமொடுபல - பூதகாரண
வேதநாயக - நீதனேஎனை. ஆதரி.

---

ரு௰. இராகம்-நாதநாமக்கிரியை-திரிபுடைதாளம்.

பல்லவி.

உன்னைநம்பினேன்ஐயனே - எனையாதரி. உன்னை.

அநுபல்லவி.

உன்னைநம்பியஏழை - தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவேநீ கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப் படலாமா. உன்னை.

சரணங்கள்.

க. தனமுமின்னார்கள்புவனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன் இது தேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உனதுதரி
சனமும்வேண்டினன் அருள் கூராயோ
மருள் தீராயோ
பொருள் தாராயோ. உன்னை

உ படிமீதினில்எண்ண முடியாஉதவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அனை நொடியாகிலுந்தொழும்
படியேஅருள்நலம் பிரியானே
தூயர்க் குரியானே
தீயர்க் கரியானே. உன்னை:

ங. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைசெய்வம் பருகாதோ
துன்பு கருகாதோ
இன்பு பெருகாதோ. உன்னை

---

## ருக இராகம் - பந்துவராளி - ரூபகதாளம்.

### பல்லவி.

கடைக்கண்ணால் எனைப்பாராய் - உன
தடைக்கலம் வினைதீராய் கடைக்.

### அநுபல்லவி.

கிடைக்கொண்ணாப் பதந்தாராய் - நலம்
படைக்கவேஅருள்கூராய் - அருட்
கொடைக்குநானென்னவேயவதரித்த
கோலாகல-மூலா அநு-கூலாகுண-சீலா-நிதம். கடைக்.

### சரணங்கள்

க. வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன் - ஒரு
தஞ்சமென் றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றேஎனை ஆதரித்தாளுவாய்
ஐயா மிகு- பொய்யால்மனம்-நையாதருள்-மெய்யா-ஒரு. கடைக்.

உ. ஐயனேதீரா யென்பாபம் - அருள்
செய்யஉனக் கென்னலோபம்
வையகமாதி வளர்அண்டம்யாவினும்
வாசாபுவ-நேசாமற-நாசாபிர.காசா-ஒரு. கடைக்,

ரு. அஞ்சலெனில்உன் வாய்நோமோ - ஏழை
நெஞ்சம்வருந் திடலாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலாஅநு - கூலாஒரு - மேலாமுதல் - நூலா - ஒரு. கடைக்.

சா. இத்தரைமீதினில் நீயே - நல்ல
பத்தரைக்காக்க வந்தாயே
சித்தமுவந்தெனை நித்தமும்ஆளொளிர்
தேகாகன - யோகாஅதி - தியாகாதனி - ஏகா - குளிர். கடை.

ஞ. பூதலம்போற்றும் பொற்பாதா - அரு
மாதவஞானப் பிரசாதா
வேதநாயகன் பாடுந்தமிழ்க்கருள்
வேதாஉயர் - நீதாகன - தாதாநய - போதா - உன். கடைக்.

---

## ருஉ. இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

பாசத்தால்மனம் வாடினேன் - உன்தன்
வாசத்தாள்மலர் கூடினேன். பாசத்

### அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லியமே - உயர்
நிர்மலாதித்த துல்லியமே - கன
மாசற்றோங்கும் பிரபல்லியமே - ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே - மல. பாசத்

### சரணங்கள்.

க. நினைவிலேன் பிழையாவுமேஎண்ண
நினக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினைஎனக்கு விரோதியா - என்றும்
விலகிடாக்கர்மவியாதியா - கொடு
மனமுமே பிரதிவாதியா - கெட்ட
மாயைஎன்ன தாயாதியா - ஐயா. பாசத்

உ. இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமன வாட்டமே
மருவும்பந்தப்பசாசு தன்னொடு
மாறிடாத போராட்டமே
கருமமாயா விகாரமே - செய்யும்
கலகஜாலம் விஸ்தாரமே - நல்ல
தருமம்எனக்குத் தூரமே - பின்னும்
தப்புகள்கப்பற் பாரமே - ஐயா. பாசத்.

ங. வளர்கல்யாணத்தில் தாலிபூட்டிட
மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவி யாபாரத்தால்உன்தன்
தாள்மறந்தனன் சாலவே
உளவியாதிக்காரோக்கியமே - நிதம்
உன்னுவோர்கள் மனோக்கியமே - நலம்
விளையுமாமறை வாக்கியமே - தொழும்
வேதநாயகன் பாக்கியமே - பந்த. பாசத்-

---

## ருங. இராகம்-கன்னடகௌளை-ஆதிதாளம்

### பல்லவி.

ஆதிபரமநாதா - ஞான - ஜோதிதரனுண்ணுதா-ஆதி.

### அநுபல்லவி

பூதலம்பரவும் விநோதனேகன அ
நீதமாயஇருள் பேதமாகவே. ஆதி.

### சரணங்கள்.

க. காமக்குரோதமதம் லோபம் - அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம் - இன்னும்
பூமியிற்பலபலபாபம் - செய்யும்
புல்லன்மனம் அவித்தியாரூபம் - நல்ல. ஆதி.

உ. பெண்பிள்ளைகள் சமுசாரம் - முதற்
பேசும்லௌகீக வியாபாரம் - தன்னில்
மண்டுமேமோகாந்த காரம் - துயர்
மாற்றியருள்வை நிர்விகாரம் - நல்ல. ஆதி.

௩. பாவக்கடல்கடக்குங் கலமே - தொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வ நிலமே - கன
நாவலர்போற்றிடும் நிர்மலமே - வேத
நாயகநானுன் அடைக்கலமே - ஆதி

## ௰௪. இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

### பல்லவி.

இந்தவரந்தருவாய் - எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும். இந்த.

### அநுபல்லவி.

சுந்தரமாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்குநிர்வாகனே. இந்த.

### சரணங்கள்.

௧. காயநிமித்தங் கலங்கிடையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான் தொண்டுசெய்யாமல்
மாயப்பிரபஞ்சத்தில் மாட்டிவையாமல்
மாதர்கண்ணம்பென் மனத்தில்தையாமல். இந்த.

௨. எங்கெங்குமேஉன் றுருவமாய்மின்ன
என்னாளும்வேறின்றி உனைமனமுன்ன
மங்களநாமமென் வாய்நிதம்பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய்மன்ன. இந்த.

௩. சுத்தசைதன்னிய நிலைமையில்சார
தோஷகர்மானுபவங் தங்களுந்தீர
அத்தனேநித்த முனக்கன்புகூர
ஆனந்தவீட்டிலே நான்வந்துசேர. இந்த.

௪. சூதுபொறுமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலகிநில்லாமல்
வேதநாயக னிடம்பஞ்சொல்லாமல். இந்த.

## ௫௫. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

### பல்லவி.

ஏகபராபரனே - கருணைப்பிர
வாகமனோகரனே. ஏக.

### அநுபல்லவி.

தேகமுறும்பல - மோகஉபாதிகள் - ஏகஎனக்கு
விவேகமருந்தருள். ஏக.

### சரணங்கள்.

௧. சஞ்சலமானேனே - மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே - அடியனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிர - பஞ்சமெலாஞ்செய்து
தஞ்சஞ்செயும்நிஷ்பிர - பஞ்சப்பொருளான. ஏக.

௨. சங்கடமாற்றாயோ - எளியேன்
தன்முனந்தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ - தமியனை
யேகனாயேற்றாயோ
அங்குமிங்கும்புவி- எங்கும்உயிரெனத்
தங்கும்படி அருள் - பொங்குங்குணாகர. ஏக.

௩. நேயர்சகாயனே - அருமறை
நீதிசொல்வாயனே
தூயநிகாயனே - அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷயாதி-நோயணுகாமலே
தாயென்வேவேத நாயகனை ஆளும். ஏக.

---

## ௫௬. இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

கருணாகடாக்ஷஞ் செய்வாயே - சுவாமி. கருணா.

### அநுபல்லவி,

மருணாசமாகவே மகிழ்வாகநீயே. கருணா.

சரணங்கள்.

க. அநியாயம் உலகவிர்த்தாந்தம் - இதில்
அழியாதவண்ணம்நீ அருள்வைஉபசாந்தம்
தனிஉன்றனோடு மேகாந்தம் - கொள்ள
சார்வதாகாலமு மென்றுசித்தாந்தம். கருணா.

உ. நாமரூபகமாம் பிரபஞ்சம் - ஆன்ம
நன்மையை அழிக்கும் எந்நாளும்இதுநஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம் - நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம். கருணா.

ந. போதாந்தநிலைமை புறுதேவே - நல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரசமொழுகுகாவே - நிதம்
வேதநாயகன் இதயவண்டுவளர்பூவே. கருணா.

---

ருஎ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா - நல்ல
அற்புதநற்பதம்பெறப் பொற்பதம்எனக்கருள்செய். ஆதி

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ராகிஎக்கும்நிறையும்
பூதசராசரப் பொருள்கள்எல்லாம்உறையும். ஆதி

சரணங்கள்.

க. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே - நான்
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியேனே - பந்த
பாசக்களையைவெட்டி எறியேனே
ஆவலுடனேஎங்கும்அலைந்தகம்வெம்பினேன்
தேவநாயகனேஉன் திருவடிநம்பினேன். ஆதி

உ. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ - கெட்ட
அகங்காரம்மெனும்பேயைஓட்டாயோ
உய்யவழியெனக்குக் காட்டாயோ-என்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன். ஆதி

ரு. அண்டங்கள்படைத்தளித்தழிப்போனே - கணம்
ஆகப்பல்கோடிகாலங்கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே - நல்ல
சுகமுத்தரொடுகூடிச்செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தொளிர்ஜோதியே
மூண்டும்வினைகளெல்லா மாற்றுதல்நீதியே. ஆதி.

---

## ருஅ இராகம்-பரசு-அடதாளசாப்பு

### பல்லவி.

ஜெகநாதா - வினை - அகலாதா. ஜெக.

### அநுபல்லவி.

பகலோனென அரும் பவஇருள் நீக்கும் ஜெக.

### சரணங்கள்.

க. பரிதாபம்பரிதாபம் ஐயாஎன்னிலைமை
பஞ்சப்புலாதியர்க் கார்தந்தார்தலைமை
தனைமிசைஎன்செய்கை யாவுமேபுலைமை
தந்தருளிஞான சாஸ்திரப்புலைமை. ஜெக.

உ. அநுகூலகர்த்தருவாகுமென் னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம்பெருங்கள்ளம்
தினமுமேபடிந்திடுந்தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை திருவருள்வெள்ளம். ஜெக.

ரு. ஈசனே அறநெறி எனக்கென் றும்விலக்கம்
என்பிழைகளை எண்ண இல்லையேஇலக்கம்
கூசியேநான்மிகக் கொண்டேன் கலக்கம்
குணவேதநாயகா கொடுத்தருள் துலக்கம். ஜெக.

---

## ருகூ. இராகம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

இரக்கஞ்செய்வாயே - ஐயாஎன்மேல் - இரக்க.

### அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயே - புரக்குமெந்தாயே
ஏகமாகிய-யோகபூரண - பாகமேபெற-மோகமேஅற. இரக்.

சரணங்கள்;

க, தேகநிமித்தம் - செய்வதநர்த்தம்
ஏகப்பிரசித்தம் - ஏங்கினேன்சித்தம்
இன்பமேவிய - நின்பதாம்புய
அன்புதங்கிட - துன்பமங்கிட. இரக்

உ, நானொருமூடன் - நாயினுங்கேடன்
ஈனர்கள்சேடன் - என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ - மானமுங்கெட
ஞானமும்கன - மோனமுந்தொட. இரக்.

ங, உலகவியாபாரம - ஓயாவிசாரம்
கலகம்அபாரம் - கர்மவிகாரம்
கஷடமும்கன - நஷடமும்பெறு
துஷ்டனானன - திஷ்டனாகவே. இரக்

ச. தாசர்கள்நேசா - தர்மவிலாசா
பாசவிநாசா - பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும் - வேதநாயகன்
மீதருள்மற வாதநாதனே. இரக்.

---

## ருO. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பரனே-பக்தர்சுதந்-தரனே - நாளும்
பக்ஷம்வைத்தென்னை சம்-ரக்ஷணைசெய்தருள். பர.

அநுபல்லவி.

இரவிகோடியென ஒளிவீசியும்
ஏகஅநேக வைபோகநிர்தேகதற, பர.

சரணங்கள்.

க. உன்னையல்லால்கதி - பின்னையில்லையென்
றுனக்குத்தெரியாதா - நாளும்
உற்றதன்பிள்ளையைப் - பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிரியாதா - மேகம
தன்னைப்பயிர்வேண்டு - முன்னே அருமழை
தானேசொரியாதா - அந்தத்
தன்மைபோல்நீஉயர் நன்மையுதவிலென்
தாபம்மரியாதா

இந்நிலமீதினி லென்னைப்போலோர்ஜடன்
இல்லையேபைங்கிளிச் சொல்லையுற்றருடன்
மன்னிமோர்கக்கடல் தன்னில்விழும்விடன்
மாளுமுன்னாளும் வந்தாளுவதுன்கடன். பர.

உ. நீவிய அண்டங்கள் - மேவிஆகாயத்தில்
நிற்கச்செய்தாய்நீயே - எந்தன்
நெஞ்சம்உன்தாளிணைக் - கஞ்சம்பதிந்திட
நீவரம்ஈவாயே - உனக்
கோவியமோஇது - காவியங்கொள்ளரும்
உத்தமஎந்தாயே - எனக்
குன்னைத்தருமட்டும் - நின்னை அலட்டா
தொழியுமோ - என்வாயே
தீவினைநாச னெனப்புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்கணவேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்பொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே. பர.

௩. தீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே - வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியுஞ்
சர்வாந்தரியாமியே - என்றும்
வேதநாயகன்மீ தருள்மறவாத
ஸ்வாமியே - உண்மை
விளங்கவேபல வளங்கள்சாருமகிஷ்
களங்கநேமியே
போதனேநீக்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நாதனேநீங்குமுன் சாதகதிட்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே. பரனே.

---

## சுஉ. இராகம்-யதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

இன்னம்ப்ராமுகம் ஏதோ - என்தன்
முன்னம்வந்தாள் ஒண்ணுதோ. இன்னம்

### அநுபல்லவி.

தன்னவனாரக்ஷிக்கத் தானேகங்கணமே
தரிததவனேஎனை ஆதரித்தல்வங்கணமே. இன்னம்.

க. யார்க்கோசொல்வதுபோல் நீஅசட்டை - செய்யில்
எப்படித்துலைப்பேன் எனகன்மக்கட்டை
மார்க்கமூடனேநீ மெய்ஞ்ஞானநிஷ்டை - தரும்
மட்டும்நான்விடுவேனோ என் அலட்டை
மூர்க்கவினைகளுக்கு நாளொருபையோ
மூடமனமுமாயையும் ஒருகையோ
தீர்க்கமாகஉனைநான் அடுத்ததுபொய்யோ
தெய்வமேநீகைவிடில் என்செய்வேன் - ஐயோ. இன்னம்.

உ. தீனருக்குதவுவதே தியாகம் - பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
ஞானமுள்ளோர்க்குன் அருள்பிரவாகம் - பின்னும்
நலம்அவர்க்கீவதில் என்னுபயோகம்
ஈனனுனஎனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்லதி யாகப்பிரயோகம்
நானுன்சந்ததி அதிலென்னசந்தேகம்
நான்விடேன்விடேன் பூர்வார்ஜிதபாகம். இன்னம்.

ங. பிள்ளைக்கும்தாய்க்கும் உண்டோபிணக்கு - மிகப்
பெருகும்உன்கருணைக் குண்டோகணக்கு
கள்ளமயலுறு மென்மனக்குணக்கு - நீக்கி
கனங்கொள்நன்மார்க்கத்தில் எனைஇணக்கு
தள்ளரிதாகிய பரமசத்துவமே
சாக்ஷாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன்தனக் குரியசொத்துவமே. இன்னம்.

---

## ௯௨. இராகம்-ஸ்ரீராகம்-அடதாளசாப்பு.

### பல்லவி,

வேதநாயகா - நம்பினேன் உனை. வேத.

### அநுபல்லவி.

ஏதமும்விப - ரீதமுங்கெட
நீதமுங்கன - போதமுங்கொடு, வேத.

சரணங்கள்.

௧. தினமும்உன்பணி விடையே - நான்மறவாமல்
செய அருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே - வழங்கிட
ஏனின்னமுந் தடையே
கனமுமேலவர்-இனமும்நிர்மல
மனமும்உன் தரி-சனமுமேயருள். வேத.

௨. பொய்வளர் மெய்க்கும்பமே-உடையமுன்
போதிபுண்ணியாரம்பமே
தெய்வநி ராலம்பமே - என்கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம்-வைகுவாயருள்
பெய்குவாய்வினை - எய்குவாயுயர் வேத.

௩. தயைசெய்யிற் பொல்லாங்கா - என்தனையாளத்
தாமசஞ்செயல்பாங்கா
பயன்உதவிடில்தீங்கா - வேதநாயகன்
பரவுங்குண தராங்கா
நயமும்ஆண்வ - ஜெயமும்காளும்அ
பயமும்பார்தபங்-கயமுமேயருள். வேத.

---

௪௪. இராகம்-ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதனே தயைபுரிவாய் - எனக்குமெய்ப்
போதமா மழைசொரிவாய். நாத.

அநுபல்லவி.

தீதகல்பரம்பர - திவ்யகுணடம்பர
ஓதருஞ்சுயம்பர - உலகமுடன் அம்பர. நாத.

சரணங்கள்

௧. நண்ணிநல்வினைகளைப் - பண்ணியறிகிலாத
நான்நரன் போலியா - இந்த
மண்ணின்மிசைஎனக்கும் - புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா - என்தன்
எண்ணமெல்லாங் கறுப்பே
எனக்குன் னடிவெறுப்பே
பண்ணாதே நீமறுப்பே
பரிந்தாள்வது உன்பொறுப்பே. நாத.

உ. என்பாட்டில் இரங்காமல் - உன்பாட்டில்நீசும்மா
இருந்திடில் அதுதகுமா - என்றும்
தன்பாட்டில் மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுன் தன்
தயையின்றிக் கைபுகுமா - என்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பதுமேற் பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவி எங்கும்ஏச்சே. நாத.

௩. தினையளவும்நன்னெறி - தனையறியாதநான்
தீவினைக்கே யிலக்கா - பாரில்
நினையன்றிமற்றெவையும் - நினையும்என்னெஞ்சுக்கு
நீமாத்திரம்விலக்கா - நன்மை
புனையும்நீதிப்பிரமாண
புவனகோடி நிர்மாண
வினயநித்திய கல்யாண
வேதநாயகன் பிராண. நாத.

---

௬௪-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

தஞ்சம்நீயே - தயைபுரிவாயே - தஞ்சம்.

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம் - ஆளும்எந்தாயே தஞ்சம்.

சரணங்கள்.

க. தினமன்வேதை - சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை - உறஅருள்பாதை. தஞ்சம்.
உ. பாதகபஞ்சன - பண்டிதரஞ்சன
போதககஞ்சன - புண்ணியநிரஞ்சன தஞ்சம்.
௩. தருமசிங்காரா - சருவசங்காரா
வரும்வேதநாயகன் - மனஅலங்காரா. தஞ்சம்.

---

### ௬௫. இராகம்-பரசு, ஆதிதாளம்.

## பல்லவி.

நீயேகதிஎனக்குன்-அருள்கூரே-தந்தை
தாயேகினை அல்லதுதுணையாரே. நீயே.

## அநுபல்லவி.

தூயகருணைமழைசொரிகாரே
சொலஅரு - நலமுறு - தலமிசை - நிலவென
மலஇருள் - செலஅருள் - அலரும்உதாரா. நீயே

## சரணங்கள்.

க. முத்தியென்பதெவர்க்குஞ்சமுதாயம் - அது
முத்தர்மட்டுக்கும்என்ப தென்னஞாயம்
நித்தியனேவிடுவேனோ என்தாயம் - நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஏதோ உன் அபிப்பிராயம்
தகவென் - தகமிசை - மிகமதி - புகஅரும்
இகபர - சுகமருள் - அகல்ஜகநாதா. நீயே.

உ. வாழுமனைதந்திடில் வேண்டாமே - என்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழவேநீயெனது மனப்பூமேல் - குடி.
ஆகிடின்உனக்கென்ன குறைவாமே
சூழநீகுடிபுகில் வினைபோமே
துதிபுரி - விதியினர் - சதியெனும் - நிதிபெற
அதிதயை - பதிவுறும் - அதிசயயோகா. நீயே.

௩. சாகனேஎன்துயர் தெரியாயோ - நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ - பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன்மனந் தரியாயோ
மிடலுறு - சுடரவன் - உடுபதி - தடவரை
கடலிட - முடன்இடர் - கெடஅடர் தேவா. நீயே.

## சுசு. இராகம்-பூபாளம்-ரூபகதாளம்.

### பல்லவி,

தேவாதிதேவே - திருவருள்
செய்தென்னை நீகாவே. தேவா.

### அநுபல்லவி.

ஜீவசம்ரக்ஷணை செய்யுங்கிருபாநிதியே
தினந்துஷ்டர்கள் - இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள் - இனஞ்சுட்டமர் தேவா.

### சரணங்கள்.

க. பாழுமனமேசுத்த பாஷாணம் - பெரும்
பாபமென்றால் அதற்குக்கலியாணம்
வாழும்இந்நாளொழிந்து கிரியாணம் - கிட்டி
வருமுன்னம்அருள்புண்ணியப் பிரமாணம்
ஏழையென்செய்கைபுன்னில் எனக்குமேவரும்நாணம
இழைக்குஞ்சுகம் - அழைக்குந்தகை
தழைக்கும்படி - பிழைக்கும்படி. தேவா

உ. அருள்செய்யின் அலதுன்னைவிடுவேனோ - உனை
அன்றிமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ - உன்பால்
வழக்கிட்டிரக்கப்பயப் படுவேனோ
மருள்செயும்பொருளைநீ - வழங்கினுந்தொடுவேனோ
மனந்தந்திடும்-அனந்தந்துயர்
முனஞ்சிந்திடு - கனந்தங்கிட. தேவா.

ங. சிஷ்டபாலகங்கண தாரணனே - பெரும்
தியபசாசகண மாரணனே
துஷ்டகண்டன மந்திரோச்சாரணனே - நாளுஞ்
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன் - ஏதநிவாரணனே
இணங்கண்டர்கள் - கணங்கண்டடி
வணங்கும்படி - குணங்கொண்டுயர். தேவா

## சுஎ. இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏகாதிபரனே - அருள்புரி-யோகாதிகரனே.

### அநுபல்லவி.

ஆகாமியமுறும் - மாகாமியம்அறும்
அகணிதசிற்பர - அதிகுணதற்பர
இகபரநற்பத - இணையறும்அற்புத. ஏகாதி.

### சரணங்கள்.

க. பழிக்குநான்குருபீடம்-பத்தனைப்போல்நான்
பரிப்பது வெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்ப்பாடம்-கொடுமோயைக்கென்
அகமேநடனகூடம்
செழிக்கும் வரங்கள்ஈவாய்
சிந்தையிற்குடியாவாய்
தினகரசுந்தர - திருவளர்மந்தர
அனகநிரந்தர - அகிலதுரந்தர. ஏகாதி.

உ. படியாக்கொடுநெஞ்சமா - ஐயனேஅது
பட்டுநந்துற்குணபுஞ்சமா
அடியேன் துயர்கொஞ்சமா-வரப்பிரசாதம்
அருளஉனக்குப்பஞ்சமா
படியெல்லாம் ஈன்றதாயே
பாரில்நற்கதிநீயே
பரமபவித்திர - பதிதஉபத்திர
தருமசமுத்திர - சகலவிசித்திர. ஏகாதி.

ங. சுரசேவிதபாதா மலரகித
சுஜநவற்சலதாதா
வரதாயகநாதா - வேதநாயகன்
மனவாலயகியாதா
நரபரிபாலன - நயகுணலாலன
நாகரிகத்துவ - நாமமகத்துவ
போகபிரபுத்துவ - புண்ணியதத்துவ. ஏகாதி.



௬௮ இராகம்-தன்னியாசி-ரூபகதாளம்,

பல்லவி.

நிச்சயம்இதுதானே - மதி - நீயருள்கோனே.

அநுபல்லவி

நச்சுமரம்போல் - நாளும்வளர்ந்தேன்.
இச்சகந்தனில் -இதயந்தளர்ந்தேன். நிச்சயம்..

சரணங்கள்.

௧. அல்லும்பகலும்பொருளில்ஏக்கம்
அநித்தியசுகங்களேஎன்னோக்கம்
நல்லவர்சபைஎனக்குநீக்கம்
ஞானவழியில்நாளுந்தூக்கம். நிச்சயம்.

௨. துஷ்டர்களுடனேஅன்யோன்யம்
துர்க்குணமெல்லாம்சர்வமான்யம்
இஷ்டம்வைப்பதுவேதனதான்யம்
ஈசனேஎனக்கறிவுசூன்யம். நிச்சயம்

௩. தீதுறும்எனக்குனதுவேதம்
செவிடன்காதில்சங்கநாதம்
வேதநாயகனேஉன்பாதம்
விரும்பிவாழ்த்தலேபிரமாதம். நிச்சயம்.

---

௬௯. இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாசாகரா - கனஉபகாரா
காத்தருள்வாய் -கோவே. கருணா.

அநுபல்லவி.

அருமையெனவே - அடியர்க்குக்காட்டும்
ஆத்மகோடிகள்உஜ்ஜீவஅமுதூட்டும். கருணா.

சரணங்கள்.

௧. நிச்சயஞானமேநினதுஸ்வாதீனம்
நீதராவிடில்எனக்கேதுமெய்ஞ்ஞானம்
அச்சமில்லமலேஅபயப்பிரதானம்
அருள்செயின் அடியனுக்கில்லைசமானம். கருணா.

உ. சிஷ்டன்போல்யாவர்க்குந்திவ்யப்பிரசங்கம்
செய்வதிலேஎனைப்போலெவர்சிங்கம்
சட்டமாய்நடப்பதேசர்வவில்லங்கம்
சாமிநீ அறியாயோதமியன் அந்தரங்கம். கருணை.

ந. எத்தனையோசெய்தேன்உனக்கபராதம்
இதுநிமித்தம்உனக்கென்மேல்விரோதம்
அத்தனேபிழைபொருத்தாள்வதேநீதம்
அருள்புரியஇனிவேண்டாம்விகாதம். கருணை.

ச. தலைவன்இல்லாவிடில்தழைக்குமோராஜ்யம்
தரையிலேநீயல்லால்சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயர் விமலசாமபிராஜ்யம்
வேதநாயகாஇன்னந் தாளென்னவியாஜ்யம். கருணை.

---

## எ௰. இராகம்-தோடி-ஏகதாளம்.

### பல்லவி.

தயைபுரியஇன்னந்தாமசமேது. தயை,

### அநுபல்லவி.

பயநிவாரணா - பாக்கியபூரணா
உயரும்ஆரணா - உலககாரணா. தயை.

### சரணங்கள்

க. அத்தனேஒருசாணுகியகுக்ஷிக்
காகநான்ஊரெல்லாமஅலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்நானிரக்ஷரகுக்ஷி. தயை,

உ. தத்துவஞானத்தைத்தள்ளியேபோட்டேன்
சாமிநான்இந்திரியவாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள்பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில்உனைவிடமாட்டேன். தயை

ந. சர்வவிநோதவிசித்திரநிர்மாணா
சாசுவதமங்களசததகல்யாணா
பரமநித்தியாநந்தபாக்கியஉக்கிராணா
பாலவேதநாயகபிரமாணா. தயை.

## எக. இராகம் - முகாரி- ரூபகதாளம்.

### பல்லவி.

காத்தருள்வாய் - எனைக் - காத்தருள்வாய்.

### அநுபல்லவி.

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை - நேத்திரனேதினம். காத்தருள்

### சரணங்கள்.

க. ஆனாலும்என்பாபம்அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்நான்காட்டும்நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள்என்தனக்கேகந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ்செய்யிலென்னஆதாயம். காத்தரு.

உ. மாதாநீஉன்மகனுன்மன்னவனீகுடிநானே
தாதாநீயாசகனுன்ஸ்வாமிநீஅடியேனே
சாதகஞ்செய்சற்குருநீதமியேன்சிஷன்தானே
ஆதாரமாகஉனைஅடுத்துவந்தேன்சுரர்கோனே. காத்த.

ந. வாக்குமனம்எட்டாதவாசாமகோசரனே
பாக்கியபலதானபரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ்செயும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயகனுக்கனுக்கிரகதயாபரனே. காத்தரு

---

## எஉ. இராகம்-தோடி-ரூபகதாளம்.

### பல்லவி.

வாவாஜகநாதா - வாவாசுகதாதா. வாவா.

### அநுபல்லவி.

பாவங்களைநிர்மூலமாக்கப்
பரமார்த்தங்கள்கொடுத்துக்காக்க. வாவா

### சரணங்கள்.

க. தர்மாதர்மந்தெரியேன் - ஜெப
தபசாதிகள்புரியேன்
கர்மம்அநுசரியேன் - உனைக்
கண்டால்இனிப்பிரியேன்.. வாவா.

௨. எனைநீவிடலாமா - பல
இடர்நான்படலாமா
வினையேதொடலாமா - ஏழை
வீணேகெடலாமா. வாவா.

௩. வர்மஞ்செய்தல்முறையா - என்றன்
வாழ்நாள்வளர் பிறையா
தர்மந்தரிற்குறையா - இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா. வாவா.

௪. ஆலோசிதமுகனே - நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள்சமுகனே - தயை
மிகும்வேதநாயகனே. வாவா.

---

## எ௩. இராகம் சஹானா-ஆதிதாளம்

### பல்லவி.

கருணைநீசெய்யவேண்டுமே - சுவாமி. கருணை.

### அநுபல்லவி.

சரணாகதியென உனையடைந்தேனே
சாதகம்வேண்டியே உனைத்தொடர்ந்தேனே. கருணை.

### சரணங்கள்.

௧. மாயவாழ்வெனும் பெருவாரிதிச்சுழலே
மாட்டியேஅலைபடும் நானொருவிழலே
காயமாகியசிறு காற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்க்கழலே. கருணை.

௨. சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலையே
தரையில்ஊன்றும்பயிர் எடுக்குமோதலையே
நிலத்திலேநீயலால் நிலையெனக்கிலையே
நீமுகம்பார்த்தருள் நிரஞ்சனமலையே. கருணை.

௩. சந்திரசூரியர் உள்ளமட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்கையில்வாளா
தந்தையேயுனதுசோதனைக்கு நான்ஆளா
சர்வஞ்ஞதக பரமதயாளா. கருணை.

ச. அகணிதகுண அகிலாண்டவிலாசா
அபரிமிதானந்த கரபரமேசா
விகசகிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா. கருணை.

---

எச. இராகம்-ஈசமனோகரி-ரூபகதாளம்.

பல்லவி.

அபயம்நீயருளுவாய்-ஆதியே-அநுதினம். அபயம்.

அநுபல்லவி.

உபயபாதம் நம்பினேன்-ஓஅநாதியே-அநுதினம். அபயம்.

சரணங்கள்.

க. அலைகடற்சிறுதுரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன்-தினமும். அப.

உ. நீர்க்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாகக்கொடியபாவமுழுதும்பண்ணினேன்-தினமும். அப

ந. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன்-தினமும். அப.

ச. ஆண்டவனீ அடிமை நான் எனை ஆளவொண்ணாதோ [அ.
நீண்டஉலகபஏழையென்றெனை நிந்தைபண்ணாதோ-தினமும்

ரு. புவனரக்ஷணகாரணார்த்த புருஷவேஷனே
பவவிமோசன வேதநாயகபலவிசேஷனே-தினமும். அபயம்.

---

எரு. இராகம்- பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோசோதனை-இன்னமஏன்சாதனை
ஏகாதிபதியே-நிதியே-எளியேன்மேல். ஏதோ.

அநுபல்லவி.

போதோயசுர பூஜிதபாதா
பூதபேத காரணசுகதாதா.

சரணங்கள்

க. தந்தைதாயொடு பலதனையரையெடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதம்கொடுத்தாய்
சொந்தமாகிறஉடற் சுகத்தினைக்கெடுத்தாய்
ஸ்வாமிநீயிந்த வாறுகைவிடுத்தாய். ஏதோ.

உ. ஒருகையால்அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பால்
பிரம்மாண்டங்களைப் பிளந்திடஇடிப்பாய். ஏதோ.

ந. துன்பஞ்செய்வதுபோல் சுகங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ளதாயைப்போல் அடியனைஅடுப்பாய்
அவர்களைத்துயரணு காமலேதடுப்பாய். ஏதோ.

ச. அதுலஅக்ஷயகுரு பரநரவேஷா
அமிர்தவருஷ துல்லியமிருதுபாஷா
விதுரநிர்தோஷ நிர்விகற்பவிசேஷா
வேதநாயகவந் திதகுணபூஷா. ஏதோ.

---

## எகூ. இராகம்-தோடி. ஆதிதாளம்.

### பல்லவி.

ஏதுபராமுகம்-ஏழையென்மீது
ஏகனே-யோகனே-மாகன-தியாகனே. ஏது.

### அநுபல்லவி.

வேதபோதக அநாதரக்ஷணனே
மேகவாகன தெய்வீகலக்ஷணனே ஏது.

### சரணங்கள்.

க. அநித்தியசுகந்தந்தாய் அதைநான்கேட்டேனோ
ஆனந்தரித்தல் அநுபவிக்கமாட்டேனோ
இனித்தஉன்பாதத்தில் இதயம்நாட்டேனோ
ஈனமாமாயையை எதிர்த்துவாட்டேனோ, ஏது.

௨. ஐயனேஎன்னைக் கேளாமல்முன்னீயே
அரியமானிடஜன்மந் தந்தாயே
வையகமீதுநான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்த்திடுந்தாயே. ஏது.

௩. முந்திநீபலருக்குக் காட்டினாயுனையே
முக்தர்க்குக்கொடுத்தனை மோக்ஷமாமனையே
பந்தியிலாகுமோ ஒரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பரசுகந்தனையே. ஏது.

௪. அகடநாகடன் சாமர்த்தியப்பிரதாபா
அசலசுஜநவாற் சல்லியநிஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாயகன் மனோதீபா. ஏது.

## ௭௭. இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உனதமலஅடிசரணம். ஆரண.

### அநுபல்லவி.

பாரகோரபரிகாரகுணாகர
வீரதீரஉபகாரமனோகர. ஆரண.

### சரணங்கள்.

௧. உனைநிதம்நினைவுறும் எனை அடர்வினை அகலாதா - நாதா.
உலககலகமயல்விலகஇலகருளேநீதா
கனஉலகஜநகஅநகதிநகரமெய்
காவலா - அடியர் - ஆவலா அருள்செய். ஆரண.

௨. துரிதர்ஹிதகுணசரிதசுகிர்தபரமேசா - நேசா
சுஜனபஜனமிர்துவசனரசனஇதிகாசா
சரதவரதஅனவரதவிரததர
சாபமோசனபிர - தாபவிலாசன. ஆரண.

௩. கனககனபுவனபவனகவனபரிபாலா - மூலா
கரணசரணகுணகிரணபரணஅநுகூலா
விநயநிலயஸ்வயவிஜயமயஅபய
வேதநாயகன்மனோதயஅதிசய. ஆரண.

## எஅ. இராகம்-ரீதிகௌளை-ரூபகதாளம்.

### பல்லவி.

சரணஞ்சர்வேசா - எனை ரக்ஷிக்கத்
தருணமிதுபிரகாசா சரணஞ்.

### அநுபல்லவி.

கருணாலயபரகாயப்பிரவேசா
பரமசுகோதயபாபவிநாசா சரணஞ்.

### சரணங்கள்.

௧. நீயேகுருமூர்த்தி - உனக்குச்சிறு
நாயேன்வித்தியார்த்தி
தூயாஉபதேசஞ்சொலி இஷ்டபூர்த்தி
ஈயிற்குருசீஷர் இருவர்க்குங்கீர்த்தி. சரணம்

௨. நீதான்பரஞ்சோதி - எனஉலகின்
மீதேபெருங்கியாதி
வேதாமலவிருள் விலக்குதல்நீதி
ஆதாரமாக உன்னருளைப்பிரசாதி. சரணம்.

௩. ஆதிகாரணநாதா - பரமஞான
ஜோதிமய அபேதா
பாதகமோசன பாக்கியப்பிரசாதா
நீதவேதநாயக நித்தியசங்கீதா. சரணம்.

---

## எக. இராகம்-லலிதா-ரூபகதாளம்.

### பல்லவி.

இன்னந்தாமசம்ஏது ஜகநாதா. இன்னந்.

### அநுபல்லவி

நன்னயமதாக உனை-நம்பினவனுன் அலவோ. இன்னந்.

### சரணங்கள்.

௧. சீலம்அருளிற் செலவோ
சேயுனக்கு நான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேளையுனக்குப் பலவோ. இன்னந்

உ. சாதுஜன ரக்ஷணனே
தாசர்கள் பிரதக்ஷணனே
கீதாமிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் சுலக்ஷணனே இன்னங்

௩. ஈசனே நான்உன்னடிமை
எப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் என்மடமை
நீக்கிடுவ துன்கடமை. இன்னங்.

௪. சாதககுணபரனு
சர்வபுவனாதரனு
வேதநாயகன் ஸ்மரனு
வேகதுரிதஹரனு. இன்னங்.

அ௰. இராகம்-கெங்காதரங்கணி-ஆதிதாளம்.

பல்லவி.

உனைநானே - தொழவரம் - அருள்கோனே. உனை.

அநுபல்லவி.

விநயசுஜனசேவிதபெருமானே
வேதமுடிவில்நடனப்புரிவோனே. உனை.

சரணங்கள்.

க. சிந்தைமீதுனதுபாதமேதியானம்
செய்யநீயருள்வாய்திவ்யஞானம்
தந்தைநீயறியுமேசமஸ்தானம்
தநயன்மீதில்லையோ அபிமானம். உனை.

உ. ஈசனேஉனதுவார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்றுமாத்திரமெய்யே
பாசமூடுமெனம்வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படிதயைசெய்யே. உனை.

௩. அடருமலசலாதிகள் நிறைபேழை
ஆனமாய உடலாகியபாழை
திடமென்றெண்ணிநிறைப்பேன் அதிற்கூழை
சினஞ்செய்யாதே நான்மிகஏழை. உனை

ச. சகலலோகம் அடங்காதுயர்காத்ரா
சமமிலாக்கபட் நாடகசூத்ர்ா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிவேத நாயகன்மனக்ஷேத்ரா. உனை.

---

## அக. இராகம்-பூரிகல்யாணி-ரூபக்தாளம்.

### பல்லவி.

கருணாகரமூர்த்தி - காப்பதுவேகீர்த்தி.

### அநுபல்லவி.

அருணோதயமாசரீர
அற்புதநராவதார. கருணா.

### சரணங்கள்;

க. தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணமேபிரவர்த்தி
ஏகமானசக்ரவர்த்தி
எனக்குநீஅருள் பாபநிவர்த்தி. கருணா.

உ. அற்பமானபோக போக்கியம்
அழிந்துபோம் இதுவேதவாக்கியம்
தற்பராநினைக்கா ணும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம். கருணா.

ந. பாதகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில்உண்டோ பிரயாசம்
வேதநாயகா நின்னேசம்
விளங்கிடஅருள்வாய் பிரகாசம். கருணா.

---

## அஉ. இராகம்-பரசு-திரிபுடைதாளம்.

### பல்லவி.

சித்தம்எப்படியோ - ஐயா - நின் சித்தம் எப்படியே.

### அநுபல்லவி.

உத்தமனுகஎன்னைஉயர்த்திடுவாயோ
கர்த்தனேநீயென்னைக்கைவிடுவாயோ; சித்தம்.

## சரணங்கள்

க. அருள்புரிவாயே - அருந்தவப்
பொருள்சொரிவாயோ
தருமவானும்படிதான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென்றனைப்பிரிவாயோ. சித்தம்.

உ. பாதஞ்சேர்ப்பாயோ - என்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆகன்செய்வினை அடியோடேபேர்ப்பாயோ
ஏதுங்கதியில்லாளென் றிரங்கிப்பார்ப்பாயோ. சித்தம்.

ந. வாடிநொந்தேனே - மெய்ஞ்ஞானக்கண்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன்பருகுஞ்செந்தேனே. சித்தம்.

---

அந. இராகம்- சஹானா- அடதாளச்சாப்பு.

## பல்லவி.

எப்படியும்பரமே - நலம்பெற
ஈந்தருள்வாய்வரமே.

## அநுபல்லவி,

செப்பருமாணிக்க தீபசொரூபனே
தேவேமனமேநொந்தேன்-காவேயெனவேவந்தேன். எப்

## சரணங்கள்.

க. கேவலம்வாடினேன் கேள்விமுறைஇல்லையோ-என்தன்
சீவன்பிழைக்கச்செய்ய வல்லனீயல்லையோ
பாவனனைப் பண்ணுதல்பாரமோ
பாகேகனியேசத்தே-ஏகோதனியேவித்தே. எப்.

உ. அற்பன் ஆனாலும் அன்னைக்குப்பிள்ளை அல்லவோ
பற்பலவாப்படித்துப்படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங்கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னே
விண்ணே அணியேசொன்னேன். எப்.

௩. இன்பதுன்பங்களஇரண்டிற்சமசித்தமே - தந்து
நின்பதசேவைநிலைக்கநீசெய்வாய்நித்தமே
அன்பன்வேதநாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுத்தே-காணப்பெறுவோர்சொத்தே. எப்

அசு. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா - காட்டாமல்சும்ம
ஒளித்தென்னவிளையாட்டையா.

அநுபல்லவி.

தன்னைப்பாராமலே தன்பிள்ளைகண்மூடி
தனம்ஊட்டுந்தாயுண்டோசாமிநீதயைகூடி. உன்னை.

சரணங்கள்.

௧. கறவைதனைப்பிரிந்தகன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்துகலங்கும்உத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத்தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாதானக்குருடர்போலும்

ஏங்கினேன்சுகம் - நீங்கினேன் துயர்
தாங்கினேன்மனம் - வீங்கினேன் - நீ. உன்னை.

௨. நினைக்கநினைக்கஎன்தனெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நின்னைப்புகழும்வாயேநித்தியாமிர்தம்புசிக்கும்
கனக்கும்நின்னடிகாணக்கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்கண்டாற்கவலையெல்லாம்நசிக்கும்

கனத்திலேனுங்க - சனத்திலேனுமென்
மனத்திலேனும்சொப்-பனத்திலேனும் - நீ. உன்னை.

௩. விண்ணேநினையல்லாமல்வேறொன்றைத் தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியே நினைக் கண்டால் நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தங் கலக்கப்பின்னிடுவேனோ

கருத்தில்மூடுவன்-வருத்தம் போடுவன்
திருத்தமாடுவன்-விருத்தம்பாடுவன்.

௪. தேவனேஉனைக்கண்டால் திட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயம் என்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற் குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள் அஞ்சிடுமோ
கோலனே அநு-கூலனேபரி
பாலனேகன - மூலனேநீ. உன்னை

௫. ஆணல்ல பெண்ணல்ல ஐம்பூதஞ் சுடரல்ல
அரியயன் சிவனல்ல அதுவல்ல இதுவல்ல
காணருமுன்திவ்ய காந்திவிரியும்நல்ல.
கனவடிவினைக்காணக்காதல்கொண்டேன் வல்ல
காரணசுக-பூரணகுண
தாரண-கன-ஆரணநீ. உன்னை.

௬. தேனேகனியேதெவிட்டாத தெள்ளமிர்தமே
சீனியே கரும்பே தித்திக்கும்இரதமே
வானேபுவியேசுகவாழ்வே பெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோரதமே
வாடினேன் கவி-பாடினேன் உனை
நாடினேன்தினந்-தேடினேன்-நீ உன்னை.

அ௫. இராகம்-பங்களா-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே-இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனே-ஸ்வாமி. சஞ்ச.

அநுபல்லவி.

வஞ்சகப்பிரபஞ்சமெனும்
நஞ்சநதிமூழ்கியே. சஞ்சல.

சரணங்கள்.

௧. இட்டவலைபட்டயரும் மான்போலே-வெயில்
சுட்டசலம்விட்டகலும் மீன்போலே-ஸ்வாமி. சஞ்சல.
௨. பொய்யுலகை மெய்யெனவேதமோறி நாளும்
ஐயகோகோமையலெனுங்கடுமீறி-ஸ்வாமி. சஞ்சல.

ந. கொட்டுமத்திற் பட்டுடையுந் தயிர்போலே - சலத்
தட்டுவரக்கெட்டுலரும் பயிர்போலே-ஸ்வாமி. சஞ்சல.

ச. பாய்புலியின்வாயிம் உறுபசுப்போலே - பெற்ற
தாய்கரம்விட்டே அலறுஞ் சிசுபோலே-ஸ்வாமி. சஞ்சல.

ரு. ஈயவேசகாயமொன்றுங்கிடையாதோ - நல்ல
தூயமனம்நீயருளத் தடையேதோ - ஸ்வாமி. சஞ்சல.

சா. மாயமலநோயகலும் விசுவேசா - வேத
நாயகனன்னேயமனக குகைவாசா - ஸ்வாமி. சஞ்சல.

---

## அசா. இராகம்-சுத்தசாவேரி-ரூபகதாளம்.

### பல்லவி.

தருணந்தருணந் தயை செய்வாயையா-ஓ
தேவதேவா. தருணம்.

### அநுபல்லவி.

ஒருவனே ஜன்மலய அபாவா
ஓஹமகானுபாவா. தருணந்.

### சரணங்கள்

க. சித்தஞ் சேற்றில் நட்டகம்பம்
ஜெகததில் இதற்குத் தினமும்கம்பம்
நித்தங்கவலை நிறைந்தகும்பம்
நீயேயினியெனக்கவலம்பம். தருணந்

உ. சோதனைக்கு நான்பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
சாதகஞ்செய்யிற்பழுதுதானோ
தள்ளினாலும் நான்போவேனோ. தருணந்.

ந. வயிறுவளர்ப்பதே என்வேலை
மற்றநேரம் விஷயலீலை
உயிருக்குயிரோ ஞானப்பாலை
ஊட்டுவாய் தொழுதேன் உன்காலை. தருணந்.

ச. சப்தஸ்பரிச ரச சுகந்தா
தர்மரூப பிர்மாநந்தா
வித்தகசுஜ நானுபந்தா
வேதநாயகப் பிரபந்தா. தருணந்.

---

அஎ. இராகம்-தேவமநோஹரி-ஏகதாளம்,

பல்லவி.

இன்னமும்தாமதமேன் - என்ஸ்வாமி. இன்ன.

அநுபல்லவி

உன்னத மாகிய துரியாதீதா
உலகாதி சர்வகாரண பூதா

சரணங்கள்.

க- மழைமுகங்காணுப் பயிர்போல்வாடி
மாதாதனைவிட்ட சேய்போலோடி
தழையும் உன்குணசரித் திரந்தனைப்பாடி
சாமிநானுனையடைந் தேன் கதிதேடி. இன்ன

உ. பத்தனைப்போல நான் போடுவேன் வெளிச்சம்
பாவத்தின்கடலுக்கு நானொருமச்சம்
அத்தனே முனியாதேகொண்டேன் அச்சம்
அருவினைபோக்கி நீ அருள்வாய் ஸ்வச்சம. இன்ன.

ங. அரசே நீயெனைக்கைவிடலாமா
அருளேசெயில் உன்கைப் பொருளேபோமா
திருவரம்ரயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்விய சோமா இன்ன.

ச. அனவரத சுகிர்த ஆத்மசொரூபா
அனந்தலையாணகுண அனகப்பிரதாபா
தினகர தினகர னாகிய தீபா
சிறியஞ் வேதநாயகன் இதயசல்லாபா. இன்ன.

---

அஅ இராகம் - சாமா- ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைத்தவிர வேறென்னைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லை மன்னர்க்கரசே. உன்னை.

அநுபல்லவி.

அன்னைக்கிணையாகிய கனபிரபுவே
உன்னற்கரிதாகிய மாவிபுவே. உன்னை.

## சரணங்கள்.

க. நீமுகம் பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால் பெருமலைகளும் அதமே
தாமதம் நீசெயிற் பிழைப்ப தெவ்விதமே
தயை நீபுரிய இச்சமயம் உசிதமே. உன்னை.

உ. நீரை அடுத்தவர்க்கிலை ஜலகஷ்டம்
நின்னை அடுத்தவர்க் குண்டோ நஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோ அதிர்ஷ்டம்
ஐயாநினக்கன்பனாக என்னிஷ்டம். உன்னை.

௩. ஊரார் மெச்சிடப் பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகிய பெரியோர் சபைநீட்டு
தீயோருடன் எனக்கனுதினங்கூட்டு. உன்னை.

௪. ஆதிமத்தியாந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாண நிர்வாகசங்காரா
போத வேதநாயகா புண்ணிய சரீரா. உன்னை.

---

## அசுரு. இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்.

### பல்லவி.

நானே உனை நம்பினேனே-நலம்
தானே அருள்கனவானே. நானே.

### அநுபல்லவி.

வானே எனச்சுகத் தேனே பொழிந்திடும்
மன்னுபிர-சன்னுதினம்- என்னுவுறும்-முன்னுநிதம். நா.

### சரணங்கள்.

க. காயம்பலதுவாரக் கந்தல்-அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற் பட்டு-மதியும் விதியும் கெட்டு
மண்டுவினை-கொண்டு மிக-அண்டு துய-ருண்டுதினம். நா.

உ. அருணகோடிப் பிரகாசகாத்திரா - அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணாநந்த நேத்திரா கனபக்தஜனஸ்தோத்திரா [தம். நா
காப்பாய்முகம் - பார்ப்பாய் வினைதீர்ப்பாய் அடி-சேர்ப்பாய்நி

ந. விபுதகணவந்திதச் சரணா-நாளும்
வேதநாயகன் அந்தக்கரணா
சுபமங்கள தரணா சுஜநகுலாதரணா
தூயாகன நேயாபுவித் தாயான சகாயாநிதம். நானே.

---

## கூ௰ இராகம் சஹானா-ஆதிதாளம்

### பல்லவி.

இந்தவேளை வந்துன் அருள் தந்தருளுவாய். இந்த.

### அநுபல்லவி.

வந்தனை நிரந்தரம் புரிந்தேன் ஐயனே. இந்த.

### சரணங்கள்.

க. அன்னைபிதா உன்னையன்றிப் பின்னையாரைய்யா
என்னைநிதந் தின்னும் வினைதன்னைத் தீரையா
மின்னுகின்ற பொன்னுலகந்தன்னில் வாழ்மெய்யா. இந்த.

உ. பூதலத்தில் ஆதரவுன்பாத இணையே
பேதகமாயேதுனக்கிங்கோத இணையே
நீதகலுஞ்சாதகர்க்கபேத துணையே. இந்த

ந. நீயநெஞ்சில் தூய அறந்தோய இலையே
மாயையெனும் பேய் செய் அநியாயமலையே
நேயன்வேதநாயகனுக்காய நிலையே. இந்த.

---

## கூக இராகம்-சாமந்தா-ஆதிதாளம்.

### பல்லவி.

மெய்ஞ்ஞானங் கொடுப்பாய்-ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்-ஸ்வாமி. மெய்.

### அநுபல்லவி.

பொய்ஞ்ஞானியர் அல்லார் மேற்கருணை
பூண்டவனே என் ஆண்டவனே நீ. மெய்ஞ்.

சரணங்கள்.

க. ஆஸ்திகள்பாஸ்திகள் யாவையும் வேண்டேன்
அநித்தியப்பொருள் நீ அருளினும்தீண்டேன்
சாஸ்திரஞ்சொல்லும் வழி இனித்தாண்டேன்
தருவென நீண்டேன் - திருவடிபூண்டேன். மெய்.

உ. அகமேகட்டுக் கடங்காக்காளை
ஐயோவினை அழித்ததுநாளை
இகமேலேநம்பினேன் மலர்த்தாளை
என்னவோநாளை - இதுநல்லவேளை. மெய்

ங. அந்நியர்க்குரைப்பேனுன் உபதேசம்
அடியேன்செய்கைகளே ஆபாசம்
என்னசொல்வேன்என் இதயப்பசாசம்
இதற்குமேல்நேசம் - இல்லைவலேசம். மெய்

ச. அத்தனேஎளியர்க்கன்னமும் ஊட்டேன்
அறுத்தகைக்குச் சுண்ணாம்புமேநீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தில்நாட்டேன்
உனைவரங்கேட்டேன் - இனிவிடமாட்டேன். மெய்

ரு. அவன்அவள்அதுவென அடங்காமூலா
அகண்டாதீத அபேதவிசாலா
சிவன்முறுவேதநாயகன் அநுகூலா
ஜெகபரிபாலா - சுகமுறுசீலா. மெய்.

---

## கூஉ. இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி.

தேவாதிதேவபல ஜீவாதிகாரணு - உன்
சேவடியை நம்பினேனே - ஓ. தேவாதி

அநுபல்லவி,

நாவாரநானேபல தேவாரம்பாடவே
நாதா-வரம்-நீதா-கன. தேவாதி.

சரணங்கள்.

க. அகஇருள்மூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்றுசொல்லி ஆளொண்ணாதோ
இகபரம்நாடினேன் சுகநிலைதேடினேன்
என்மேலிரக்கம் உனக்கேனொண்ணாதோ
பகவானேநீயெனது முகம்நோக்கியேதயை
பண்ணியருள் புண்ணியர்தொழும். தேவா.

உ. அன்னையும்பிதாவுநீ ஆவியும்உடலுநீ
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும் நீமுத்திநீசித்திநீ
மூலாதிகாரணமும் மூர்த்திநீயே
நின்னேசவாரியில் நான்எந்நேரமும்படிய
நித்தியம்பல சித்தியருள். தேவாதி.

ங. ஏழைநான் அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசாஎன்மீது தயைஎண்ணுவாயே
பாழுமுடலைநம்பினேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம் அறப்பண்ணுவாயே
சூழும்அடியார்கள் மனம்வாழும்வேதநாயகா
சுத்தமுறு சித்தம்அருள. தேவாதி.

---

கூங. இராகம்-பலஹம்சா-ஆதிதாளம்,

பல்லவி.

ஞானமார்க்கம் நானேசேர
நல்வரம் அருளையனே.

அநுபல்லவி.

ஈன அசேதன இருள்வழிநீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க. ஞானமா.

சரணங்கள்.

க. நீசனானாலும் உன்தாசனன் அலவோ
நின்னை அல்லால்தெய்வம்இன்னமும்பலவோ
ஈச்னேஎன்குறைஎவரிடஞ்சொலவோ
என்மொழிகாட்டிலேஎரித்திடுநிலவோ. ஞான

உ. கர்த்தனே ஒழியாக்கவலைப்பிரபஞ்சம்
கண்ணியிற்படறவைபோற்கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணந்தரஉனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லால்இனிவேறிலை தஞ்சம். ஞான.

ங. அமரர்நரர்சோபன அமிர்தபக்ஷணனே
அனந்தபேதகஜீவாத்மரக்ஷணனே
சமரசஞானசற்குண சுலக்ஷணனே
தாசன்வேதநாயகன்பிரதக்ஷணனே. ஞான.

## கூச. இராகம்-சஹானா-ரூபகதாளம்.

### பல்லவி.

உதவிசெய்யலாகாதா - ஓ-ஜகநாதா. உதவி.

### அநுபல்லவி.

நிதம்நிதம்உனதிணையடிகளை
நெஞ்சில்நினைத்திடவரம்நீ. உதவி.

### சரணங்கள்

க. அடியேன் துயர்படவேதகுமா
சுடர்முன் இருள் தானேபுகுமா
கொடிதாகியவினையால்நிலை
குலைந்தேன் - மனம் - மலைந்தேன். உதவி

உ. மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அனையேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன் - தினம் - பயந்தேன். உதவி.

ங. சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனேகுண
வரனே - பரம் - பரனே.

கூரு-இராகம்-சாரங்கபைரவி-ஆதிதாளம்.

பல்லவி,

உன்னைமறவாமல்எனக்கருள்வரமே
பரமே - சுகபரமே. உன்னை.

அநுபல்லவி.

பொன்னோடொளியர்போலும்எக்காலும்
அன்னை தன்னைமறவாப்பிள்ளைபோலும். உன்னை.

சரணங்கள்.

க. மங்களமாகப்பெருவாழ்வுவந்தாலும்
சங்கடமுடன்கனதாழ்வுவந்தாலும். உன்னை.
உ. பூமண்டலம்எங்கும்புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலையென இகழ்ச்சிவந்தாலும். உன்னை.
ந. மகிழ்வுறவேவெகுமானம்வந்தாலும்
இகழ்வுறவேகனஈனம்வந்தாலும். உன்னை.
ச. தலைகீழாகஇத்தரைபுரண்டாலும்
அலைகடல்பெயர்ந்ததன்கரைபுரண்டாலும். உன்னை
ரு. அருமையாகியசதானந்தநிலையே
மருவும்வேதநாயகன்மகிழ்கலையே. உன்னை.

---

கூசு. இராகம்-கண்டா-ஆதிதாளம்.

பல்லவி.

வாவாதேவே - வந்தெனைக்
காவாயோகோவே. வாவா.

அநுபல்லவி.

காவீர்பூவே - கலையோர்பாவே
ஓ - ஓ - வேதாவே. வாவா

சரணங்கள்.

க. வனவேடன்வலையே - மாட்டி - மனநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே - சார்ந்தஎன் -இடர்யாவையுந்தொலையே
வனமார்நிலையே - மதியோர்கலையே
கனமார்குணமலையே. வாவா.

உ. உடல்விழுந்திடுமுனமே - பரனே - உனையே அநுதினமே
திடமாஎன்மனமே - கினைந்தறம் - செயவே அருள்கனமே
அடியார்தனமே - அயலார்சினமே
படியார்தமக்கினமே. வாவா

௩. நினையாஎன்மதியே-உலகில்-நிதமும்செயும்சதியே
வினைதீர்இதுசதியே-பரவும்-வேதநாயகன்நிதியே
அனைவோர்திதியே-அருள்வாரிதியே
தனைநேர்பரகதியே. வாவா

---

## கூள. இராகம்-உசேனி-ஏகதாளம்.

### பல்லவி.

தருணம்ஈதையா-இக்கால-ஹரணம்ஏதையா.

### அநுபல்லவி.

கருணையால்உலகனைத்துந் தாங்குபகாரா-தீரா-உதாரா
காணும்பிரபஞ்சம்-தனிற்சிக்கிக்
கோணும்என்னெஞ்சம்-அநுதினம்
பேணும்பொய்வஞ்சம்-இனிஉன்தன்
மாணடிதஞ்சம்-எனைத்தொடர்
கருமந்தனையேநீக்க-தருமந்தனைநிலையாக்க. தருணம்

### சரணங்கள்.

க. ஆண்டான்அடிமையை வேண்டாமெனத்தள்ளின்
ஐயாபுகலினி ஏது-மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்விடேன்
நீஎங்கினிச்செல்வதோது - சற்றும்
தீண்டாதெனைத்தள்ளினாலும் விடுவேனோ
திருவே-தருவே-குருவே
தீனன்என்மீது-நினதபி
மானம்விடாது-தினமதி
யீனன்செய்தீது-தொலையமெய்ஞ்
ஞானம்நீஓது - பஞ்தறு
சித்தத்தமரும்கோவே-கர்த்தத்துவமுறுதேவே. தருணம்

உ. நீயெனைநீங்கிடில் எதும்உள்ளோ ரனைனும்
நின்பெயர்க்குக் குறைவாமே - அழுஞ்
சேயர்தமக்கமு தீயாதிருப்பரோ
சிறந்த அன்னையர்தாமே - வரம்
ஆயிரந்தரங் கேட்டுங்கொடாயிது
அழகா-குழகா-பழகா
தற்றபொன்போலே - நடையின்றி
முற்றமேண்மேலே - பலகலை
கற்றும்பொய்மாலே - கொண்டேன்என் தன்
சிற்றறிவாலே - எனைநிதம்
ஆளாய்பலபுவிநாதா - மாளாநலமுறுநீதா. தருணம்.

௩. எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை-மிக
இத்தரையெங்கும் பிரசித்தனேநீசற்
றிளகச்செய்வாயிந்தக் கல்லை-உயர்
வித்தகனே வேதநாயகன்போற்றிடும்
வேதா-நாதா-அபேதா
மின்னும்பிரக்கியாதா - அடியேன்மேல்
இன்னமும்வாதா - எனை அஞ்சல்
என்னஒண்ணாதா - நின்காதில்-என்
சொன்னுழையாதா - அநுதினம்
வேதத்தயர்சர்வேசா-தீதற்றவர் மனவாசா தருணம்.

---

௩௮. இராகம்-பூரிகல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி.

நம்பினேன் உனையே - தற்காத்தருள்
வெம்பியஎனையே - அநுதினம் - நம்பினேன்.

அநுபல்லவி.

அம்புவியெங்கும்-நிரம்பும்பலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே - உன் தன்செயலே
உண்டோஅயலே - அநுதினம். நம்பினேன்

சரணங்கள்.

க. புவனகாரண - பவநிவாரண - நவஉதாரணனே
சம்பூரணனே - மெய்யாரணனே - அநுதினம். நம்பினேன்

உ. கோரவினைப்பரி - காரஅகிலவிஸ் - தாரஅதிகாரா
உபகாரா - அதிதீரா - அநுதினம். நம்பினேன்.

ந. சுகுணசேகர - மிகுமனோகர - சுகிர்தசாகரனே
பராபரனே - தயாபரனே - அநுதினம். நம்பினேன்.

ச. பஜிக்கும்தொண்டர்கள் - புசிக்கப்புசிக்க-ருசிக்கும்
தேன்மயமே-அதிசயமே - அருள்நயமே - அநுதினம். நம்பி

ரு. வேதநாயகன்-போதமுறப்பிர-சாதம்அருள்பொருளே
மனஇருளே - தொலைத்தருளே - அநுதினம். நம்பினேன்



சுசு. இராகம்-நாகத்தொனி-திசிரம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

தேவாதிதேவனே - ஜீவனேபிரபாவனே. தேவாதி.

அநுபல்லவி.

ஜீவாதிகாரனே - தீரனே - சூரனே
ஜெகத்திலே மனம்வாடி நொந்தேன்
மகத்துவேஉனைநாடி வந்தேன். தேவாதி.

சரணங்கள்.

க. எங்கும்நிறையும்நீ எனக்குன்னைக்காட்டாய்
ஈதென்ன கண்கட்டு மாயமோ
அங்கும்இங்குமே உனைத்தேடி
அலையவைத்தா யிதுஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்னம்
தான்அடியேன் சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திர நேயமோ - கன. தேவாதி

உ. எத்தனையோபிழை செய்தேன் அப்பிழை
எண்ணஉன்னாலும் கூடுமோ
கத்தனேநீஅருள் செய்தால்என்னொடு
கருமப்பேய் போராடுமோ
அத்தனேஎன்பால் நீவரில்உந்தன்
அடிகள்வருந்தி வாடுமோ
இத்தலம்நீவரில் முத்தர்கள்சமுகம்
எங்கேஎன்றுனைத் தேடுமோ-உயர், தேவாதி.

௩. அருளிற்பெரியனீ மருளிற்பெரியனான்
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனா யிருளுக்குரியனாய்ப்
புரிந்தேன்துர் வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம்
ஊரெல்லாம் சஞ்சாரமே
திருஅற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீ உபகாரமே-ஒரு. தேவாதி.

---

# ௧00. இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

## பல்லவி.

நிதம்நிதம் உனையே தொழுதேனே
பதமலர் அருள்கோனே.

## அநுபல்லவி.

சததவைபோகா - சகலநிர்வாகா
மதுரப்பிரவாகா - வரகுணயோகா. நிதம.

## சரணங்கள்.

௧. அறம்வர இலையே-அகம் அறவிலையே
மறம்ஒருமலையே-மனமொருசிலையே
புறமயல்வலையே-புகுமதிகலையே
துறவறநிலையே-துயர்வினைதொலையே நிதம்.

௨. மலம்வளர்தீயே - மனமொருபேயே
புலமொருநாயே - புவிகொடுமாயை
பலவிதமாயே - படர்வுறும்நோயே
தலமிசைநீயே - தயைபுரிவாயே. நிதம.

௩. அடியவர்இனமே - அருள்மலர்வனமே
கொடியவர்சினமே - குறையறுதனமே
முடிவறுதினமே - முறையுறுகனமே
அடிதொழும்வேத - நாயகன்தரிசனமே. நிதம்

---

## க 0 க. இராகம் சாமா ஆதிதாளம்.

### பல்லவி

என்னசொன்னாலும்நீ - இரங்காதிருப்பது
ஏதோகுணக்கடலே.

### அநுபல்லவி.

உன்னதஏகனே - உலகநிர்வாகனே. என்ன.

### சரணங்கள்

க. இகசுகம்அநுசிதம் - என்பதென் அபிமதம்
தகவுறும்உயர்பதம் - தாவெனவேவிதம். என்ன.
உ. இன்னமும்ஏன்சினம் - எனக்குநின் தரிசனம்
மன்னஎன்கண்முனம் - வாவெனவேதினம். என்ன.
ங. மாயைபடாந்திரம் - மாறஓர் தந்திரம்
நீயருட்சுதந்தரம் - நீட்டெனநிரந்தரம். என்ன.
ச. உலகவியாபாரமே - ஒழியாவிசாரமே
கலகசம்சாரமே - கவலை அபாரமே. என்ன.
ரு. அருமறைவாசகா - அடியர்பிரயோசகா
தருமப்பிரதாயகா - தனிவேதநாயகா. என்ன.

---

## க 0 உ, இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

### பல்லவி

நாதா அடியேன் - மீதேன்கோபம்.

### அநுபல்லவி

ஆதாரமாகவே அகிலத்தைத்தாங்கும். நாதா.

### சரணங்கள்

க. தாரம்சுதர்இல்லாச் சந்நியாசிஎன்றேனோ
சீரூரில்லாப் பரதேசிஎன்றேனோ. நாதா.
உ. தந்தைதாயில்லாத தனியர்என்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர்என்றேனோ. நாதா.
ங. மன்னும்கைப்பொருள்இல்லா வறியர்என்றேனோ
சின்ன அணுவும்நுழை சிறியர்என்றேனோ. நாதா.

ரு. உரியஆண்பெண்ணல்லா ஒருத்தர்என்றேனோ
விரிபலயுகங்கண்ட விருத்தர்என்றேனோ. நாதா.

௬. ஆதிஅந்தம்இல்லா அநாதிஎன்றேனோ
ஜாதிகுலமில்லா நிர்ஜாதிஎன்றேனோ. நாதா.

௬. வீடுவாசல்இல்லாத வெளியர்என்றேனோ.
ஈடன்னம்துணியில்லா எளியர்என்றேனோ. நாதா.

எ. மனம்புகுந்தொளிக்கின்ற மாயர்என்றேனோ
உனும்நெஞ்சுக்கெட்டா உபாயர்என்றேனோ. நாதா.

அ. சகலஉலகச்சுமை தாங்கிஎன்றேனோ
மிகநரர்அன்புக்கு வீங்கிஎன்றேனோ நாதா.

௯. மற்றோர்கண்ணிற்படாதமானிஎன்றேனோ
முற்றும்வாய்பேசாத மோனிஎன்றேனோ நாதா.

க0. குணமில்லார்களைக்காயும் கோபிஎன்றேனோ
அணிஅங்கமில்ல அரூபிஎன்றேனோ, நாதா.

கக. சீர்பேர்இல்லாஅநாம தேயர்என்றேனோ
ஆரும்துணைஇல்லா அபாயர்என்றேனோ. நாதா.

கஉ. மாதின்றிஉலகீன்ற மாயம்சொன்னேனோ.
வேதநாயகாஇன்னம் வேறென்சொன்னேனோ. நாதா.

---

## ௯க. இராகம்-பியாகு-ஆதிதாளம்.

### பல்லவி.

உன்னைப்போலஎனக்குற்றபேர்கள்-இந்த
உலகந்தன்னில் - உண்டோ.

### அநுபல்லவி.

அன்னைதந்தைகுருதேவே-இந்த-அகிலகாரணபிதாவே. உன்னை.

### சரணங்கள்.

க. தந்தைதாய்க்கு மனஸ்தாபம் - வரில்
சாற்றுவார்கள் பலசாபம் - மண்ணில்
எந்தநேரமுமே பாவம் - செய்யும்
எனக்குநீசெய்வது லாபம். உன்னை.

உ. அண்ணன்தம்பிக் குண்டுபாகம் - அதை
அடையுமட்டும் அவர்ஸ்நேகம் - பின்பு
எண்ணுவார்கள்பல - துரோகம் நீ
ஈவைநன்மைகள் அநேகம். உன்னை.

ங. மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம்-தரும்
மட்டுமேஅவர்கள் மித்திரம் - பின்பு
நினைவர்செய்வர்பல குத்திரம் - என்றும்
நீடும்உன்னருள் சமுத்திரம். உன்னை.

ச. ஏவல்மன்னர்க்குண்டு இறையே - அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே - உன்னை
மேவினோருக்கில்லை குறையே - தொழும்
வேதநாயகன் தன்இறையே. உன்னை,

---

## ௯ச. கூஇராகம்-காப்பி-ரூபகதாளம்.

### பல்லவி,

நாளே நல்லநாள்-புண்ணியம்செய்யும். நாளே.

### அநுபல்லவி.

ஆளும்வேதநாயகன்-தாளிணைபூசிக்கும். நாளே.

### சரணங்கள்,

க. பாபமில்லாதகால - க்ஷேபமும்சுஜனசல்
லாபமுமேபரம - லாபமாகக்கொள்ளும் நாளே.

உ. வேதமும்பெரியவர் - போதமும்தேவசங்
கீதமும்முதலான - நாதங்களுடன்செல்லும். நாளே.

ங. ஞானமும்ஜீவாபி - மானமும்பரன்பத
தியானமுமேசெய்து - மோனநிலையில்நிற்கும். நாளே.

ச. பத்தினிசுதர்குடும் - பத்தவர்யாவரும்
சித்தநிர்மலமுடன் - பக்திபுரிந்திடும், நாளே.

ரு. கூனர்குருடர்அங்க - ஈனர்பிணிஉடையோர்
தீனர்முதலியோர்க்குத் - தானதருமஞ்செய்யும், நாளே.

---

## க0ரு. இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏதோ இன்னம் வாதோ இரங்காதோ உன்மனமே. ஏதோ

### அநுபல்லவி.

வேதவரோதய - விமலச்சந்திரோதய
வித்தகநயகுண - உத்தமசிரேஷ்டா
பத்தர்கள்பழுதறு - சித்தஅபீஷ்டா. ஏதோ.

### சரணங்கள்.

க, ஐம்புலவேடர்வேட்டை - ஆடித்திரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்வீட்டை - விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன் - நிலைமையில்லாப்
பூவின்சுகம்வியந்தேன் - அநுதினமும்
பாவவழிநயந்தேன் - இனிமேல்வரும்
சாவைஎண்ணிப்பயந்தேன் - நிரந்தரமும்
தரைமுதலாகஎங்கும் விரியும்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே. ஏதோ
உ. தீயமனோவியாபாரம் - தீர்ந்திடவேஇந்நேரம்
நீயருள்பரிகாரம் - நின்பதமேஆதாரம்
நேசஅபிமானம் - சற்றும்இல்லாமல்
பேசுவேன்ஞானம் - எனக்குலவ
லேசம்அநுஷ்டானம் - இலையேஉப
தேசசன்மானம் - கொடுத்தருள்செய்
தினமனமகிழ்வுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமயமே. ஏதோ
ந. நீர்க்குமிழிஎனவே - நிலையாவாழ்வுகனவே
பார்க்குள்உனைஉனவே - பரிந்தருள்வாய்நனவே
பாசம்குலையாதா - எனக்குமோகா
வேசம்கலையாதா - உலகம்செய்யும்
மோசம்தொலையாதா - உன்மீதுகன
நேசம்நிலையாதா - நிலைமைபெறு
நீதநிரஞ்சன அபேதசுகுணமே
வேதநாயகன்மனப் போதமர்மணமே. ஏதோ.

## ௧0௬. இராகம்-பந்து. ஆதிதாளம்.

### பல்லவி.

நீயேசர்வசக்தன் - நல்ல
நிச்சயனேகன அக்ஷயனே. நீயே.

### அநுபல்லவி.

தாயுந்தந்தையுந் தமரும்அற்றுயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றுயே. நீயே.

### சரணங்கள்.

௧. பல்லாயிரம்அண்டம் படைப்பாய்உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள் அடைப்பாய். நீயே.
௨. அஸ்திவாரந்தூண் அருஞ்சுவரிலேயே
பத்தியாநீசெய்த பகிரண்டங்களிலேயே. நீயே.
௩. பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்மேலே. நீயே.
௪. திரிநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரன்மீன் பலசெய்ததாலே. நீயே.
௫. அண்டம்அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மனமலர் சுமக்குமேபாரம். நீயே.
௬. பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன்உனதுடற் சோதிமுன்கரியே. நீயே.
௭. யுகம்பலகோடிகள் உனக்கனைக்ஷணமே
நிகழுமுக்காலமும் நினக்குக்கிரகணமே. நீயே.
௮. சகலர்க்கும்ஊட்டிநீ தானென்றும்உண்ணுய்
நிகழ்பெருங்காவலால் நித்திரைபண்ணுய். நீயே.
௯. தினகரசந்திர தீபம்ஏற்றிவொய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய். நீயே.
௧0. நடவாய்பறவாய் நாடெங்கும்இருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பெருப்பாய்
௧௧. மரங்களினுழைந்தே மலர்வாய்கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய். நீயே.

கஉ. கண்ணைப்பொருளகளைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய். நீயே.
கங. கனைகடல்உனதருட் கடலிலோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னகவலை. நீயே.

---

கoஎ. இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

ஞானகுருபரவடிவே- அருமறையின்முடிவே. ஞான.

அநுபல்லவி.

மோனசுகாசனசம்பிரம-முத்தியளித்திடும்-நித்தியபரப்பிரம. ஞான.

சரணங்கள்.

க. பாமரனைஎன்மீதுனக்குக் கிருபை இல்லையா - என்தன்
பாவம்தொலைத்தெனை ஆள்வதுனக்கொருமலையா
தாமதம்நீசெய்யதேகம்எனக் கென்னநிலையா-நிதம்
தஞ்சம்பத-கஞ்சம்பிர-பஞ்சம்தரு-நஞ்சம்தொலை. ஞான.

உ. தீனகிருபாநிதிஎன்றுபேர் கொண்டநீஅலவா-அருள்
செய்தெனை ஆள்வதினால் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்ப்பதம்அண்டும் நான்கிள்ளைநீஇலவா-புவி
அஞ்சும்புலன்-அஞ்சும்பகை-நெஞ்சும்செயும்-வஞ்சம்தொலை. ஞா

ங. நின்மலநித்திய நிரஞ்சனநீதேவிநோதா-நாளும்
நிகிலசராசரம் யாவையும்தாங்கும் பிரக்கியாதா
தன்மயவிலாச சுகாநுபவானந்த நீதா - எனைச்
சாடும்வினை-வாடும்வழி-பாடும்பர-வீடும்கொடு. ஞான.

ச. நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங் குணாளா - பவ
நாசமகேச பிரகாசவிலாச தயாளா
அம்புவியில்வேதநாயகன் போற்றும்பொற்றாளா - இங்கும்
அங்கும்புவி-எங்கும்புகழ்-தங்கும்பதி-ரங்கம்பெறு. ஞான.

கo அ. இராகம்-ஈசமநோகரி-ஏகதாளம்.

பல்லவி.

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே.

அநுபல்லவி.

ஐயையோஎன்செய்வேன் அருள்புரிகோவே. மெய்.

சரணங்கள்.

க. மலர்த்துணைப்போற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணி செய்யாக்காயனும்நானே. மெய்.

உ. கண்டுநீர்பெருகாத கண்ணனும்நானே
அண்டமெலாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே. மெய்.

ங. நிதம்உனைநினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே. மெய்.

சு. கனிந்துனைச்சேவியாக் கரத்தனும்நானே
தினந்தினம்வணங்காத சிரத்தனும்நானே. மெய்.

ரு. கருதிஉன்புகழ்கேளாக் காதனும்நானே
சுருதியைமறுத்திடும் சூதனும்நானே. மெய்.

சு. கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
முடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே. மெய்.

எ. போதஅபேத புநிதநிஷ்கோபா
வேதநாயகன்தொழும் விமலசொரூபா. மெய்.

---

கoகூ. இராகம்-சாமா-ரூபகதாளம்.

பல்லவி.

பரபிரமமே - திருவருள் - தரல்கிரமமே - அநுதினமும்.

அநுபல்லவி.

வரகுண சுகாநுபவ
சுரகண பூஜிதவைபவ. பர.

சரணங்கள்.

க. செய்வதெல்லாம் தீவினையே
தினையளவும்உனை நினையேன்
தெய்வமே நம்பினன் உனையே
தீர்த்தருள்வாய் துயர் தனையே. பர.

௨. அறியேன் மேற்குக் கிழக்கு
அன்புமில்லேன்நின் கழற்கு
சிறியேன்மேல்என் வழக்கு
ஜெபதபத்தில்எனைப் பழக்கு. பர.

௩. பாழ்மனமோவல் விரும்பு
பாவம்அதற்குக் கரும்பு
தாழ்வுறுநான்சிறு துரும்பு
சாமிஎன்மேல்மனந் திரும்பு பர.

௪. நினையேன்தர்மம் அதர்மம்
நிலமிசைநான்மூட ஜென்மம்
அனையேஎதின்னம் வர்மம்
அகற்றிடுவாய்எனது கர்மம் பர.

௫. அகண்டமண்டலாதி பத்திய
ஆதியந்தரகித நித்திய
மிகுந்தகுணபரண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய. பர.

---

கக0. இராகம்- பியாகு ஆதிதாளம்.

பல்லவி.

பாதம்நம்பினேனே - போதம்அருள்கோனே:

அநுபல்லவி.

வேதமுதலோனே - மாதவர்பிரானே. பாதம்.

சரணங்கள்.

க. ஆதரவுநீயே - ஐயனேஎன்தாயே
வாதைமலநோயே - மாற்றிஅருள்வாயே. பாதம்.

௨. தீங்குகள்அநேகம் - செய்திடும்என் துரோகம்
நீங்கிடவிவேகம்-நீஅருள் அமோகம பாதம்.

௩. முத்தர்கள்சமூகனே-முக்கியபிரமுகனே
உத்தமசுமுகனே - ஓவேதநாயகனே. பாதம்.

## கககக இராகம்-கனகவசந்தம்-ஆதிதாளம்.

### பல்லவி.

நீயே துணைபரனே - துன்பம்
நீங்கிட அருள்வரனே.

### அநுபல்லவி.

மாயாதிமிர விஜயதினகரனே
தாயாகியசர்வ சாதகரனே. நீயே

### சரணங்கள்.

க. அடியேன்செய்வ தெல்லாம் அரும்பாபம்
கொடியேன்மீது கொள்ளாதேகோபம் நீயே.

உ. பண்ணேன் துதியே - படியேன் விதியே
கண்ணேமணியே கதியேநிதியே. நீயே.

ஙா. உனையேநம்பிடில் உண்டோபயமே
அனையேவினை தீர்த் தருள்வாய்ஜெயமே. நீயே.

ச. மாதவம்உடையவர் மகிழ்மலரகிதா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிதா. நீயே.

---

## கஙஉ. இராகம்-பைரவி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

நாதாகன - வேதாதினம் - நீதாவரமே.

### அநுபல்லவி.

போதாசுக - தாதாஅதி - கியாதாபிர - சாதாபுவி. நாதா.

### சரணங்கள் ;

க. நித்தியம் அநித்தியம் சுகத்தினை மதித்திடு
பைத்தியம் விடுத்தினியசத்தியம் உதித்திடவே. நாதா.

உ. சுந்தர - மடந்தையர்கள் - சந்திர - முகந்தனை
நினைந்தெனது-சிந்தனைசெய் - தந்திரம் - ஒழிந்திடவே. நாதா.

ஙா. சொப்பனமே -ஒப்பனைகொள் - அற்பஉடலைப்பொருள்எ
னப்பிரியம் - வைப்பதற - நற்பலன் - உறபுவன நாதா.

ஈ. மாதர்நிதி - பூதலமேல் - ஆதரம்உறுதபடி
சாதகப்பிர - போதமருள - வேதநாயகன்புகழும். நாதா

---

# ககந, இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

## பல்லவி

வேதநாயகனே - மெய் - மெய் - மெய் - மெய். வேத.

## அநுபல்லவி

பாதகம்செய் துழலும்பாழ்மதியே - ஐயன்
பாதங்கள்அன்றிநமக்கார்கதியே
பூதலவாழ்வினெடுபுகழ்நிதியே - வெறும்
பொய் - பொய் - பொய் - பொய். வேத.

## சரணங்கள்

க. அத்தமியாதொளிர் திவாகரனே - அதி
அற்புதமான சிவாகரனே
சித்தமிசைஒளிர் சுதாகரனைத் - துதி
செய் - செய் - செய் - செய் - செய். வேத.

உ. பூதலமெங்கும் இசைபோனவனே - அதி
புனிதனைஉயிர்க்குயிர் ஆனவனே
மாதவர்காணுகின்ற மானவனே - உன்னுள்
வை - வை - வை - வை. வேத.

ந. நாதபூத்பௌதிகஸ்தாபகனே - வேத
நாயகன்மீதில்எனறும் ஞாபகனே
ஓதரிதானசர்வ வியாபகனைப் பணிந்
துய் - உய் - உய் - உய். வேத.

---

# கஙச. இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

## பல்லவி.

ஓ-ஓ-ஜெகநாதா-ஒருவரம் - உதவிடல்ஆகாதா.

## அநுபல்லவி.

தேவேதினம் பல பாவேபாடி என்
நாவே இளைத்தேனே. ஓ-ஓ.

சரணங்கள்.

க. மனம்விஷயப்பிரியம் - சகலமும்
வாசாகைங்கரியம்.
சினம்மதம்மாற்சரியம்-பூண்ட என்
செய்கைகள் ஆச்சரியம்
இனமாகிய பக்தஜனமூடன் ஐக்கியம்
கனவினும் நீங்காமல். ஓ-ஓ.

உ. பொய்யை மெய்யயெனநாடி - அநித்தியப்
பொருள்களையேதேடி
வையகம்எங்கும்ஓடி - நான்செய்த
வஞ்சகம்பலகோடி
மையற்கரிஇடர்கள் - செய்யவேதொடருதே
ஐயோ-கூ-கூ-கூ. ஓ-ஓ.

ந. நேசர்சிந்தாமணியே - அடியேன்
நெஞ்சகம்பூண் அணியே
ஆசையில்வரும்பிணியே - தொலைத்துநல்
அறமெவிடப்பணியே
ஈசனேஉனைத்தொழும் - தாசன்வேதநாயகன்
பாசவலை உறுமல். ஓ-ஓ.

---

கஙரு. இராகம்-தேசமுகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

போதம்தர என்னவிவாதம்,
எனக்கமல
போதம்தர என்னவிவாதம்.

அநுபல்லவி.

வேதம்உணர்ந்தொழுகும்
நீதம்உடையவர்க்குப்
பேதம்அறவரப்பிர
சாதம்அருள்தெய்வமே. போதம்

சரணங்கள்

க. மோகம்பெருகியலெள
சோகம்எனும்பெரும்பிர
வாகந்தனில்அழுந்தி
ஆகம்மெலிந்தேன் ஐயா போதம்,

உ. நெஞ்சோர்புறம்புலன்கள்
அஞ்சோர்புறம்மின்னார்கண்
நஞ்சோர்புறம்வருத்தும்
என்சோர்வெலாம்அகலப் போதம்.

ங. பெண்ணாசையாலும்வளர்
மண்ணாசையாலும்நிதி
எண்ணாசையாலும்மனம்
புண்ணாகிவாடினேனே போதம்.

ச. ஏதும்அறிவில்லாஎன்
மீதுவர்மஞ்செய்தல்த
காதுபரமபக்தர்
ஓதும்வேதநாயகா. போதம்.

---

கககூ. இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

சருவேசாசரணம் - எனக்குன் - தாளே ஆபரணம்.

அநுபல்லவி.

இரவும்பகலும்உனையே அநுசரணம்
இசைந்திடச்செய்யிதுநல்லபிரகரணம். சரு.

சரணங்கள்.

க. நீயேசெய்வதெல்லாம் உபகாரம்
நின்மேற்சொல்லஉண்டோ விவகாரம்
தீயேன்புரிந்திடும்பிழைகள் அபாரம்
தேவாசெய்இதற்கோர் பரிகாரம். சரு.

உ. புண்ணியம்செய்திலன்கடுகுப் பிரமாணம்
பொய்யன்நான் ஆயினும்இது பிரமாணம்
எண்ணிடில்எனக்குமின்னார் விழிபாணம்
என்சரித்திரம்பெருங்கதா புராணம். சரு.

ங. பேசுவதெல்லாம்வாசா ஞானம்.
பெரும்பாவியர்க்கெல்லாம்நான்பிர தானம்
நேசாசகலமும்உனதா தீனம்
நீயருள்எனக்குக்கிருபாரச பானம். சரு.

ச. ஈமேல்தொடுக்கின்றபாணப் பிரயோகம்
என்னீமுனிந்திடில்ஏது நிர்வாகம்
மாமோகாதியில்மயங்கி னேன் ஆகம்
வரவேதநாயகா அருள் பரிபாகம். சரு

சகள. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

சமயம்ஈதையா - நலம்எனக் - கமையஓதையா.

அநுபல்லவி

அமர்செய்தீவினைச்-சுமைதொலைத்தெனை
அமலன் ஆக்கிடல்நேர்த்தி - ஒரு
சமமிலா அருட்பூர்த்தி - உறு
நிமலகாரணமூர்த்தி. சம

சரணங்கள்.

க. இன்னம்தாமசமோ - வினைசுமந்
திட்என்னால்வசமோ - எனக்
கின்னல்சகசமோ - உனக்கருள்
ஈய அவசமோ
அன்னமென்னடை - மின்னல்நேரிடைக்
கன்னியர்விழிஇணையே - மனம்
தன்னில்பாய்ந்திடும்கணையே-இனி
என்னசெய்வேன்நீதுணையே. சம

உ. கருணைகூராயோ - எனதுளக்
கவலைதீராயோ - இந்தத்
தருணம்வாராயோ - எளியேன்
தன்முகம்பாராயோ
இரணியம்பெண்கள் - தரணிமீதந்தக்
கரணமேவமெய்துறந்தேன்-கடல்
திரணம்போலெங்கும்பறந்தேன்-உன்தன்
சரண்பங்கயம்-மறந்தேன். சம

௩. மாயைநீக்காயோ - எனைமுகம்
மலர்ந்துநோக்காயோ - வினைத்
தீயைப்போக்காயோ - எனை அதி
சீலன் ஆக்காயோ

நீயலாதுசகாயம்ஏதினித்
தீயவர்பயங்கரனே - மல
நோய் அறஅருள்வரனே - வேத
நாயகன்தொழும்பரனே. சம.

---

## கக அ இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்

### பல்லவி

வாவா-வாவா-என் இதயந்தனில்
வந்தேமலரடிதந்தே ஆண்டிட. வாவா.

### அநுபல்லவி.

சாவால்வருந்துமுன்-காவாகாத்திடில்
தாவா-பூவார்-ஜீவா-தேவா. வாவா.

### சரணங்கள்.

க. மின்னார்கள்விழிவலை-தன்னால்தயங்கினேன்
உன்னாதரவில்லாமல்-பன்னாள்மயங்கினேன். வாவா.

உ. பொய்யானவாழ்வுதனை-மெய்யாகநம்பினேன்
ஐயாநின்னடிக்கன்பு-செய்யாமல்வெம்பினேன். வாவா.

ங. சிந்தாகுலங்கெட-விரைந்தாளிலதின்மையா
எந்தாயேநீயெனை-முனிந்தேகல்நன்மையா. வாவா.

ச. வேதநாயகன்தொழும்-சீதமலர்ப்பாதனே
ஆதவன்எனப்புவி-மீதில்வரும்நாதனே. வாவா.

---

## ககக-இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்.

### பல்லவி.

இன்னமும்என்மீ தெனக்கேன்பராக்கு
நின்னருள்தந்தே யெனைநீங்கதூக்கு. இன்ன.

### அநுபல்லவி.

பன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாப கிருபாகரா. இன்ன.

சரணங்கள்,

௧. ஏதும்கதியில்லா ஏழைநான்
என்னசெய்யும்சலம் நீங்குமீனே
பாதவனஜமலரே நம்பினேனே
பாகேஅமுதே பசுந்தேனே. இன்ன.

௨. கானலெனும்காய சுகபோகம்நாடிக்
கர்த்தனேசெய்தேன் வினைகோடிகோடி
வேனில்வெயிலுற்ற புழுப்போலவாடி
வேதனைவந்தேன் உன்தன்பாதந்தேடி. இன்ன.

௩. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
அவ்வியக்தமய அசகாயசூரா
தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
தோஷபரிகார உதாரதீரா. இன்ன.



## ௧௨௦. இராகம்-சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

இப்படிப்பட்டநான்-எப்படிஉன்முகத்
தேவந்துவிழிப்பேன் ஐயா. இப்ப.

அநுபல்லவி.

தப்பறியாதவர் - தமதறிவினைத் தூண்டும்
தாயேதந்தையேஎன்மேல்-நீயேஇரங்கவேண்டும். இப்ப.

சரணங்கள்.

௧. பாதாதிகேசபரியந்தமும்நான்விடம்
பகலும்இரவும்மாயை பண்ணும்என்நெஞ்சில்நடம்
ஏதம்அறஅந்நெஞ்சம்-ஏகாஇடம்எவ்விடம்
ஏனினும்உன்னிடம்வர வெனில்அதுமுழுமூடம். இப்ப.

௨. கர்த்தனேஎன்மேல்அற்பக் காற்றடிக்கினும்போறேன்
காசினியெல்லாங்கெட்டுக் கலங்கினும்துயருறேன்
எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமறேன்
எச்சிற்கையாலுங்காகம் ஓட்டிநான்இழிவறேன். இப்ப.

ங. இகமிசைநான்சுமந் திடுவதுட்பிச்சுமை
எனினும்பிறர்செய்யற்ப இடருக்கும்செய்யேன்க்ஷமை
மிக அற்பர்தமைச்சேர்வ தல்லால்மேலவர்தமை
வேதநாயகனேநான் மேவி அறியேன் இமை. இப்ப.

---

## கஉக. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

### பல்லவி,

எந்தவிதமும்உன்-கந்தமலர்ப்பதமே-அடியேன் அடைந்திடச்
சிந்தைமகிழ்ந்துநீ-தந்தருள்வாயிதமே.

### அநுபல்லவி.

அந்தரமெங்கும்-அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர்-மானசக்காக்ஷியே. எந்த.

### சரணங்கள்.

க. சகசமானிடர் தமக்குப்பாவமே-பிழையாவும்பொறுத்துத்
தயைசெய்தாள் வதுநின்சுபாவமே
தகவேஉன் சரித்திரப்பிரபாவமே-அநுதினமும்பாடிச்
சாதகம்பெறஎன்மனோ பாவமே.
தந்தைநீதானே-உனக்கொரு
மைந்தனும்நானே-இவ்வாறுநான்
சொந்தமானேனே- தரிசனம்
தந்தருள்கோனே-புவிதனில்
நிகரில்லாதநியாயப் பிரசித்தனே
சகலலோகசராசர கர்த்தனே. எந்த.

உ. மணல்அன்னத்தில் கல்லாய்த்திடும்வகையே-எனைச்சோதித்திடி
மனத்திலுள்ளதெல்லாம வினைத்தொகையே [ல்என்
குணமுண்டோபுவி வாழ்வுவெறும்புகையே-அதைவிரும்பிஎன்
குரங்குமைம்புலன்களும் செயும்பகையே [மனக்
கோதையர்மோகம்-தனில்வரும்
வாதைஅநேகம்-எவர்க்குமே
ஈதநுபோகம்-எனக்கினிப்
போதும்இபபோகம்! அநுதினம்.
புணரும்ஆநந்த பொக்கிஷசாலையே
மணமிகுந்தருள் மலரும்சோலையே. எந்த.

௩. தாதைபிள்ளையைத்தள்ளல் பாந்தமா-இதுநான்குபேரும்
சரியென்றேப்புக்கொள்ளும் சித்தாந்தமா
நாதனேஎனைமுனிதல் சாந்தமா-எனதுள இரும்பையெக்
நாளுமஇழுக்கும் விஷயம் காந்தமா-உனையேகதியென
நண்ணியசித்தர்-பெருந்தவம்
பண்ணியசுத்தர்-நிகரறு
புண்ணியபத்தர்-முதலிய
எண்ணிலாமுத்தர்-உடையுமுன்
பாதகிதி அவர்க்கே பிகிராஸ்தியா
வேதநாயகன் பங்கென்னநாஸ்தியா. எந்த.

---

## ௧௨௨. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

### பல்லவி

ஏகாகனயோகா அநுதினம்-எனையாண்டருள்வாயே.

### அநுபல்லவி.

சேகரகுண திவ்ய தேஜோமயகாத்திர.
பாகநித்தியானந்த பாக்கியபரமக்ஷேத்திர. ஏகா.

### சரணங்கள்

௧. கண்டுநிகர்மொழியும்-வண்டுநிகர்விழியும்
தண்டுநிகர்புயமும்-கொண்டுமயக்குமந்தப்
பெண்டுபிள்ளைகட்குழைத்-துண்டுறங்கிதிதமும்
மண்டுவினையலாதுன்-தொண்டுசெய்தறிகிலன் ஏகா.

௨. நாடேன்பெரியரொடு-கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன்உனதருளைத்-தேடேன்உனதுபுகழ்
பாடேன் அநுதினங்கொண்-டாடேன்பதமலரைச்
சூடேன் அருவினையைச்-சாடேன்சுரர்புகழும் ஏகா.

௩. நாதாதிவ்யவரப்பிர-சாதா அகண்டசமு
திதாகினைவினுக்க-தீதா அடியர்கள்ச
மேதாநிலைகொள்பஞ்ச-பூதாதிரிகர்மவி
னோதாதினந்தினமும்-வேதநாயகன்புகழ். ஏகா.

---

## கஉ௩. இராகம்-போகனம்-ரூபகதாளம்.

### பல்லவி.

இன்னம்பராமுகமாமோ - வினை
நின்னருள் தானின்றிப்போமோ.
மின்னல்உற்றுபுகழ் - நன்னலமேவிய
வேதார்த்தா - கன - போதார்த்தா - ஓ. இன்.

க. வன்பிணைப்புக்கொண்டாலே - க்ஷமை
மன்னர்செய்வார்புவிமேலே
என்பிழையைப்பலதாலே - ஒப்பி
னேனேமுனிவேதென்பாலே
அன்பெனும்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆள்ந்தேனே - துயர் - சூழ்ந்தேனே - ஓ. இன.

உ. தன்பதியைப்பகையோரே - கொள்ளத்
தான்பார்த்திருப்பவன்யாரே.
நின்பதிஎன்மதிதேரே - அதில்
நீங்காமல்உன் கண்முன்னேரே
உன்பகையோரெனும் காமக்குரோதாதிகள்
உற்றாரே - ஜெயம் - பெற்றாரே - ஓ. இன்

௩. நெஞ்சங்கவலைக்குவிடா - ஐயா
நின்சோதனைக்குநான்ஈடா
அஞ்சாதேநீஇங்குவாடா -என்
றருளாதின்னம் வேறுபாடா
தஞ்சமெனவேதநாயகன்போற்றிடும்
தாதாவே - பெற்ற - மாதாவே - ஓ. இன்.

---

## கஉச. இராகம்-உசேனி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

ஏகநாதா - அரும்பர - போகமுநீதா.

### அநுபல்லவி.

பாகவிகசித கற்பகாரண்ணிய
பதிதபாவன பரமகாருண்ணிய
தேகம்நிறைஅதி ரூபலாவண்ணிய
தீயர்தமைச்சிக்ஷை செயுங்கீர்த்தாக்ஷிண்ணிய. ஏக

சரணங்கள்.

௧. நாளுமுழ்கினன் பாபஅங்கணம்
நாடினேன் பெரியோர்கள்வங்கணம்
ஆளும்படிதரித்தனை நீ கங்கணம்
அன்போடெனைச்சேர் நல்லோர்கள் தங்கணம்
நீளும்அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிறு மாசுநீங்கிய. ஏக.

௨. அடியன்மீதுனக் கென்னபிணக்கமே
அகற்றுவாயென தகங்கள்உணக்கமே
நெடியநின்பத மலர்க்குவணக்கமே
நித்மும்நான்செய்ய அருள்நல்லிணக்கமே
கடியதுயர்கடல் கடக்கஉனதிணை
அடியலாதினி அயலுண்டோபுணை. ஏக.

௩. உதிக்கும்பலகதிர் நிகரும்விதுரனே
உயர்நித்தியானந்த நகரச்சதுரனே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
சூழுஞ்சீவராசிகள் தம்பிதிரனே
குதிக்குமாயையைக் கொன்றுதாழ்விக்கும்
மதிக்கும்வேதநா யகனைவாழ்விக்கும். ஏக.

---

## ௧௨௫ இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி,

தயைபுரியே - எனதுளத் - துயர்பிரியே. தயை.

அநுபல்லவி.

உயரும்தர்மசம்வர்த்தனா
உத்தமர்தம்மனநிர்த்தனா
கயவர்இழிகுலமர்த்தனா
கருதரும்புண்ணியயத்தனா. தயை

சரணங்கள்.

க. புண்ணியம்நாயேனுக்கெட்டி
போய்களெல்லாம்வெல்லக்கட்டி
திண்ணியமெஞ்ஞானதிட்டி
சிறிதீயில்லென்னநட்டி
சின்மயமே - மெய்வேத - நன்மயமே - எனையுறு
தின்மைப்பழியோடே - நன்மைப்பலன்நீட
உன்மெய்ப்பதம்நாட - கன்மப்பயிர்வாட. தயை.

உ. என்குறைபாராட்டாதே
இன்னம்என்னைவாட்டாதே
நின்கோபங்காட்டாதே
நிபங்கள்என்மேற்சாட்டாதே
நிச்சயமே - நிலைபெறும் - அக்ஷயமே - கனமுறு
நேசத்திடம்ஓங்க - பாசத்திடம்நீங்க
மாசற்றறம்வீங்க - வாசத்தகைதாங்க. தயை.

ங. அண்டசராசரரூபா
அகதிகளுக்கநுதாபா
விண்டலமண்டலபூபா
வேதநாயகன்லாபா
விண்மணியே - எனதிரு - கண்மணியே - பழிசெயும்
வேகப்பவமோட்டி - மோகப்பகைவீட்டி
பாகப்பதம்நீட்டி - யோகப்பநிநாட்டி. தயை.

---

## கஉரு. இராகம்-ஜங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

நல்லவரந்தந்தருளுவாய்
நாதனே அபேதனே. நல்ல.

அநுபல்லவி

அல்லும்பகலும் உன்னைநாட
அற்புதபரமார்த்தந்தேட. நல்ல

சரணங்கள்.

க. அன்பருடனேகூடவும் - அநுதினம்துதிபாடவும்
இன்பசாகரம்ஆடவும் - ஏனனாக்கண்டால்ஓடவும். நல்ல.

உ. பஞ்சபுலனை அடக்கவும் - பாவக்கடலைக்கடக்கவும்
நெஞ்சம்ஒடுங்கிக்கிடக்கவும் - நீதிநெறியில்நடக்கவும், நல்ல

ங. தீனர்களையேதாங்கவும் - சிந்தைத்துயரம்நீங்கவும்
ஞானவழியில்ஓங்கவும் - நானுன் அடியில் தூங்கவும். நல்ல

ச. பத்தர்பரவுந்தேவனே - பரமதிவ்வியசுபாவனே
வித்தகமனோபாவனே - வேதநாயகன்ஜீவனே. நல்ல



## கஉஎ. இராகம் - பூரணச்சந்திரிகை ஆதிதாளம்.

### பல்லவி.

இன்னம்தான் பராமுகமோ - இதுதகுமோ - ஸ்வாமி.

### அநுபல்லவி,

சந்நிதானதரிசனம் அருளாமல் இன்னம்

### சரணங்கள்

க. செந்தாமரைப்பதமே - சேரேன்நானிதமே
நொந்தேன்பலவிதமே - நோய்தீர்த்தருள்ஹிதமே
சிந்தனைனிற்பிரமைகொண்டேன்
தீமைகள்செய்து கைகண்டேன்.
சந்ததமும்நலம் விண்டேன்
சஜ்ஜனசங்கமும் அண்டேன். இன்னம்

உ. பூண்டேன் அபசரிதம் - புகழேனின்சரிதம்
ஆண்டோய்என்துரிதம் - அறவேசெய்துரிதம்
நீண்டபெருந்தகை பூணேன்
நீதிதனையுமே பேணேன்
மூண்டபெரும்பழி நாணேன்
முத்திபெறும்வழி காணேன். இன்னம்

ங. அடியார்திரவியமே - அமலோதயஸ்வயமே
வடிவார்ஆலயமே - வளர்தேஜோமயமே
திடமுறு புவனாதாரா
தினகரகோடிசரீரா
விடயமுறு அதிகாரா
வேதநாயகன் உபகாரா இன்னம்



கஉ௮ இராகம்-பிலகரி-ரூபகதாளம்,

பல்லவி.

கருணாலயநிதியே - தினமுஉன்
சரணாம்புயம்கதியே. கருணாலய.

அநுபல்லவி.

சருவபேதவிநோதகாரண
பரமசாதகபவநிவாரண. கருணாலய.

சரணங்கள்.

க, நிதம்வெளுக்கவெளுக்கவெண் தூசு
நிமிஷந்தோறும்நிறையுமேமாசு
அதுபோல்என்தன் அகமுறும்ஆசு
அகலவேஉன் அருள் ஒளிவீசு
அகிலகோடிவிசாலகற்பித
சகலஜீவதயாள அற்புத. கருணாலய.

உ. இங்கென்செய்கைகள்யாவும்நிகிர்ஷ்டம்
எனக்குப்புண்ணியம்என்றும்அநிஷ்டம்
பங்கம்தீர்க்கில்உனக்குண்டோநஷ்டம்
பரமனே அருளாயோஉத்கிரிஷ்டம்
பாரமாகவேபண்ணும்பாதகம்
தீரவேநீசெய்வைசாதகம். கருணாலய.

ங. அமலபாஸ்கரகோடிசொரூபா
அகண்டசச்சிதானந்தபிரதாபா
நிமலவேதவேதாந்தநிரூபா
நிர்விகற்பநிரஞ்சனதீபா
நீதபூரணநிலயமஞ்சித
வேதநாயகன்இதயரஞ்சித. கருணாலய.

---

கஉகூ. இராகம்-அமீர்கல்யாணி-ரூபகதாளம்,

பல்லவி.

நாதாகிடையாதாவரமே - ஜெக - நாதா

அநுபல்லவி.

பாதாரவிந்தம்நம்பும் பாவியைமேதாவியாக்க - நாதா,

சரணங்கள்.

க. எந்தநாளுமுடவிர்த்தி - இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன்துர்ப்புத்தி-மாறவே அருளாயோசித்தி

உ. அகமெனுமதயானைஎன்வசம்-ஆகவே அருள்ஞான அங்குசம்
சுகத்துக்காதிகளில்சமரசம்-தோன்றவே அருள்வாய்தயாரசம்.

ந. அபயவரதகரநிர்வாக - ஆபத்பாந்தவ அருட்பிரவாகா
விபவசார்வபௌமயோக-வேதநாயகன்ஸ்வாநுபோக. நாதா-

---

## ககo. இராகம்-அபூர்வம்.

பல்லவி.

சருவவிநோதா - திருவருள்தாதா - சருவ.

அநுபல்லவி.

இரவுபகல்உனதிணையடி நாடவும்
தருமநிர்மல சுகசாகரம் ஆடவும். சருவ.

சரணங்கள்.

க. பசிதாகசோகரோக பாபசரீரம்
கசிவுறுமலஜல காமபண்டாரம்
சுசிஅறும்இதில்விளை தோஷம்அபாரம்
நீசமயனே அருள் நீபரிகாரம். சருவ.

உ. கடல்நடுவேகரை காணுதகாகம்
இடர்உறல்போலவே எனதுநிர்வாகம்
மடம்அறஅருள்செய் நிர்மலபரிபாகம்
கடவுளேநாடினேன் கருணைப்பிரவாகம். சருவ.

ந. சுரகணசேவித துரிதவிநாசன
சருவதயாபர சாபவிமோசன
கருமநிவாரண கருணைவிலோசன
வரவேதநாயகன மனகமலாசன. சருவ

---

## ககக. இராகம்-சரசாங்கி-ரூபகதாளம்.

பல்லவி.

எத்தனைகவிபாடினும்பலன்ஏதுமில்லையே. எத்தனை.

அநுபல்லவி

சித்தம்வாக்குக்கிரியை - அத்தனையும்தினம்
உத்தமமார்க்கத்தில் - ஒத்துநில்லாமல். எத்தனை.

சரணங்கள்.

௧. சந்ததமும்பரன் -சுந்தரபாதத்தை
அந்தரங்கந்தனில் -சிந்தனைசெய்யாமல். எத்தனை.

௨. மோசஞ்செயும்ஆசா -பாசங்களென்னும்பி
சாசந்தனைச்சர்வ -நாசஞ்செய்யாமல். எத்தனை.

௩. கோபம்பொறாமைபொய் -லோபம்மதமுதற்
பாபங்கட்கேமனஸ் -தாபங்கொள்ளாமல். எத்தனை.

௪. மும்மலபாசத்தை -நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனாய் -தர்மஞ்செய்யாமல். எத்தனை.

௫. நாயகனும்வேதநாயகன் தீனர்ச
காயன்தனைநெஞ்சுள் -நேயம்பண்ணாமல். எத்தனை.

---

## ௧௩௨. இராகம்-ஹம்சத்தொனி-ஆதிதாளம்.

பல்லவி.

ஞானோதயவரம் அருளே.

அநுபல்லவி.

பானோதயபரம்பொருளே ஞானோ.

சரணங்கள்.

௧. மாயாவிகாரஜெகமே-தோயாமல்அருள்சுகமே
தூயர்நேசனே-ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே-சித்விலாசனே ஞானோ

௨. தேகாபிமானம்அறவே-யோகாநுசாரம்உறவே
பாகம்நீட்டுவாய்-பாதம்நாட்டுவாய்
மோகம்ஓட்டுவாய்-முத்திகாட்டுவாய். ஞானோ.

௩. ஆதாரம்எதுமிலையே-பாதாரவிந்தம்நிலையே
போததாயகா-புண்ணியஆயகா
வேதநாயகா-விமலதூயகா ஞானோ.

## கஉ௩. இராகம்-தீனசங்கராபரணம்-ரூபகதாளம்.

### பல்லவி.

ஆதிமூலனே - நீதிநூலனே - நித்ய. ஆதி.

### அநுபல்லவி

வேதபோதசாதகம்பெற - நீதயைபுரிவாய். ஆதி.

### சரணங்கள்.

க. திட்டமாகமாயைககே அஷ்டதிக்கும்விஜயமா - நான்
துஷ்டன் ஆதலால்உனக்கும்என்கிட்டவரப்பயமா
கெட்டஇதயமே - அதில் - கஷ்டம்உதயமே ஆதி.
சிஷ்டரோடெனைக்கூட்டிஞான - நிஷ்டன்ஆக்குவாய் - நித்ய.

உ. துணைஉன்பாதஇணையலாதுசொல்லவேறுண்டோ [ண்டோ.
இணையிலாயொரு திணையிலாய் தெய்வம் எனக்குததான்இர
குணம்தருவாயே - அருள் - மணம்தருவாயே
உணரொணாதநினதுசேவைபுணரவே அருள்வாய்-நித்ய. ஆ

௩. மனையைச்சுத்தஞ்செய்தினிதுநல்மனிதர்க்குஞ்சகசமே
நினதகமெனும்எனதுநெஞ்சம்நிதமலவசமே
புனிதம்செய்வாயே - அதில் - இனிதமர்வாயே
தயன்வேதநாயகனுக்குன்-தரிசனமருள்வாய்-நித்ய. ஆதி.

---

## கஉ௪, இராகம்-பியாகு-ரூபகதாளம்.

### பல்லவி

பிக்ஷை அருளாயோ - ஞான. பிக்ஷை.

### அநுபல்லவி.

அக்ஷயநிர்மல - லக்ஷணனேஜீவ
ரக்ஷணனே அதி - பக்ஷமுடன்ஞான. பிக்ஷை.

### சரணங்கள்.

க. சத்தியமாரூத - புத்தியும்ஓயாத
பத்தியுமெய்ஞ்ஞான - சித்தியுமுத்தியும். பிக்ஷை.
உ. நேசருடன்சக - வாசமும்ஞானப்பிர
காசமும்உன்விசு - வாசமும்நேசமும். பிக்ஷை.

௩. தானம்பொறைஅருள் - மானம்இதராபி
மானம்நிதானமும் - மோனமுந்தியானமும். பிக்ஷை.

௪. பூதமெல்லாம்விப - ரீதம்உருமலே
ஆதரவுசெய்யும் - வேதநாயகனே. பிக்ஷை.

---

## ககரு. இராகம்-சௌராஷ்டிரம்-சாப்புத்தாளம்.

### பல்லவி.

இந்தமனம் கெட்டதையா
பந்தவலைப் பட்டதையா. இந்த.

### அநுபல்லவி.

சந்ததம் புண்ணியந்திரண்ட
சுந்தரதேகா நான்கொண்ட. இந்த.

### சரணங்கள்.

௧. சொன்னபடிகேளாச்சண்டி
தோஷமூட்டை தூக்கும்பண்டி
உன்னிடம்வரவே நொண்டி
ஓடும்விஷயத்தை அண்டி. இந்த.

௨. இதரர்வாழக்கண்டால் வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும் வேகம் ஓட்டம். இந்த.

௩. சுகதுக்கபேதம்போதிக்கும்
சூழ்நலமெல்லாம்பேதிக்கும்
பகல்இரவென்றுசாதிக்கும்
படுவிஷம்உண்டுசோதிக்கும். இந்த.

௪. காடுங்கரையும்சஞ்சாரம்
காமப்பசாசுக்காகாரம்
நாடும்பிரபஞ்சவியாபாரம்
ஞானம்இதற் கெட்டாத்தூரம். இந்த.

ரு. பாதகங்கட் கெல்லாங் குரு
பாசம் விளைவிக்கும் எரு
ஏதுவில்லா விஷதரு
எனக்கநுகூல சத்துரு. இந்த.

சு. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்ஞையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகப் பிரமாணு இந்த.

கஙசு. இராகம்-மனோகரம்-திரிபுடைதாளம்

பல்லவி.

எந்தையே உனக்கும் அடியேனுக்கும்
எத்தனை பேதம் ஐயா? எந்தை.

அநுபல்லவி.

சந்ததசர்வ சாம்பிராஜ்ய பிரபுத்துவ
சாசுவததேவதேவ மகத்துவ. எந்தை.

சரணங்கள்.

க. தேவனீசகல புவனேசன்
சிறியனான்உன்தன் தாசாநுதாசன்
காவலனானீ ஸ்வயம்பிரகாசன்
கசடனான் அந்தகாரப்பிரவேசன். எந்தை.

உ. சத்தியமாகநீதர்மசொரூபி
தாரணிமீதிலேநான்பெரும்பாபி
நித்தியனானநீசுத்த அரூபி
நிச்சயமாகநான்மெத்தக்குரூபி. எந்தை.

ங. சமமில்லாதநீயேமலரகிதன்
சாமிநான்உலகில்மலசகிதன்
விமலனேநீபலபிராணிகள்விகிதன்
வேதநாயகனைநான்எவர்க்குமேஅகிதன். எந்தை.

# காவல ஸ்தோத்திரம்.

## கருஎ. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

### பல்லவி.

உனக்கே நமஸ்காரமையா - இடர்
ஒன்றும்வராமலே நன்றுசெய்தாயே. உனக்கே.

### அநுபல்லவி.

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகரனான பராபரனே. உனக்கே.

### சரணங்கள்.

க. நேத்திரங்களைநீயெம் - மாத்திரமுமூடாமற்
காத்திருந்தாயெனை - இராத்திரிமுழுதும். உனக்கே.

உ. சத்துருபயமின்றி - நித்திரைசெயவெனைப்
பத்திரமாயுன்கையில் - வைத்திருந்தாயே. உனக்கே.

ங. மூர்தும்அரவம்விஷ - ஜெந்துக்களால்அபாயம்
வந்துகெடாமலேகா - பந்துசெய்தாயே. உனக்கே.

ச. தீயும்வெள்ளமுங்காற்றும் - பேயும்விலங்கும்பல
நோயும்வராமற்காத்தாய் - தாயும்தந்தையும்போல். உனக்கே.

ரு. நாங்களோர்தடையின்றித் - தூங்கஇராமுழுதும்
வீங்கிருட்போர்வைதனைத் தாங்கிநின்றாயே. உனக்கே.

சா. இருட்மொழிவிடியும் - பொருட்டுநீபுவிதனை
உருட்டிஇராமுழுதும - புரட்டிநொந்தாயே. உனக்கே.

எ. பூதநாயகனேபிர - போதநாயகனேசங்
கீதநாயகனேநல் - வேதநாயகனே. உனக்கே.

## ௧௩-அ. இராகம்-தோடி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆளாயோஎனையே - நம்பினேன்நெடு
நாளாகஉனையே. ஆளா.

### அநுபல்லவி.

நீளும்புவனாதாரா - நேயருக்குபகாரா
நிகராறும் - இகபர - சுகமருள் - வரதா
அகம்அறு - சுகுணர்கள் - புகழ்அந - வரதா ஆளா.

### சரணங்கள்.

௧. எத்தனைபதங்களுக்கெடுப்பேன்கற்பனைநிதம்
எல்லாஞ்செலவாய்ப்பாட்டுக்கினிமேல்இலைஆஸ்பதம்
அத்தனேஇரங்கிநீஅருள்வாய்பரமபதம்
அன்றேற்பழம்பாட்டன்றிஅறியேனுன்புதுப்பதம்
அல்லல்வினையகலநல்லவரந்தனைஆளுவாய்-அஃ
தல்லவெனிற்பதங்கள்சொல்லநல்வாக்குதவி மூளுவாய்-கன
அகணித - சுகுணபிர - மூகபரமேசா
ஜெகமயல் - அகலமெய் - நிகழ்உபதேசா. ஆளா.

௨. கனியினால்மரத்துக்குப்பலனுண்டோஅதுபோலே
காசினிமீதடியேன்பேசினநீதிநூலே
இனியபயன்பிறருக்கீயினும்அதனாலே
எள்ளளவுநலந்தான்எனக்குண்டோபுவிமேலே [கு
இலக்கஅந்நூலின்மிசை விலக்கியதூர்க்குணங்கள்யாவுமே-வெ
கலக்கமுறஎன்மன்மலர்க்கண் அநுதினமுமேவுமே - என்தன்
இதய - மதமயலை - முதல்அறநீக்கி
நிதம்நிதம் - உனதிரு - பதமலர்தேக்கி ஆளா.

௩. ஓங்ககிலாண்டகோடிதாங்கிடும்பரிசன்னியா
உத்தமமூர்த்திகரசுத்தபிரமசைதன்னியா
நீங்கருமாமகிமைவீங்கிவளர்சௌஜன்னியா
நித்தமுந்துதிபுரிபக்தர்தமக்கன்னியோன்னியா
நீதிநெறிவிலகுபாதகம்அறஅருளூட்டுவாய் - பெருங்
கோதகல்இகபரசாதகஞானநிலைகாட்டுவாய் - அரு
நிதிபர - கதியெனும் - விதிஉபதேசா
துதிசெய் - வேதநாயகன் - மதிஅமர்நேசா. ஆளா

# ஈசுரவருடத்துப் பஞ்சத்தைப் பற்றிப் பாடியது.

கரு௧. இராகம்-உசேனி-திசிரஜாதி-மட்டியதாளம்.

பல்லவி.

பஞ்சம்தீர்ஐயா - உனையன்றித்
தஞ்சம்ஆர் ஐயா. பஞ்சம்.

அநுபல்லவி.

வஞ்சகமேகம்உலோபர்கள்போலே
மண்ணில்மழைபொழியாமையினாலே
சஞ்சலமாகித்தளர்ந்தோமேன்மேலே
சாமிகதிஉந்தன் தாமரைக்காலே பஞ்சம்.

சரணங்கள்.

க. எட்டொள்பத்துநாள்பட்டினியோடே
இடையிலேகந்தை இருகையில்ஓடே
ஒட்டிஉலர்ந்தஉடல்என்புக்கூடே
ஒருகோடிபேர்கள்வசிப்பதுகாடே
ஊரும்இல்லாமல் - குடிக்கத்தண்
ணீரும்இல்லாமல் - அன்னமெனும்
பேரும்இல்லாமல் - பசிதீர்க்க
ஆரும்இல்லாமல்
பாரில்அனேகர் பரதேசிஆனாரே
ஊரில்அனேகர்உயிர்மாண்டுபோனாரே. பஞ்சம்.

உ. தாரங்களையேபுருஷர்கைவிட்டார்
தந்தைதாய்பிள்ளைகளை விலையிட்டார்
வேரும்இலையுங்கிழங்கும்சாப்பட்டார்
வெறுங்கையராய்வெளியேபுறப்பட்டார்
வேலியும்அற்றார் - பெண்சாதிகள்
தாலியும்விற்றார் - வேலைசெய்து
கூலியும்பற்றார் - பலபல
சோலிகள்உற்றார்
தோலும்எலும்புமாய்த் தோன்றியேசோம்பினார்
பாலரும்தாய்முலைப்பால் அற்றுத்தேம்பினார். பஞ்சம்.

ரு. பஞ்சம்இதுபோலக்கண்டதிலையே
பலபேர்அடுப்பில்லையார்கள்உலையே
நஞ்சம்போல்நாட்குநாள்ஏறும்விலையே
நாங்கள்படுந்துன்பம்நானாறுமலையே
நரர்கள்மெய்வாடி - மனமிக
உருகித்தள்ளாடிக் கண்ணீர்ஆறாய்ப்
பெருகியேஓடிப் - பிக்ஷைக்கேட்க
வருபவர்கோடி
இரவுபகல்எங்கும் ஏழைகள்சத்தமே
பரனேகலியொடுபண்ணினார்யுத்தமே, பஞ்சம்.

சு. ஏரிகுளம்நதியாவும்நீர்சுண்ட
ஏகமாக்கோடைக்கனல்எங்குமண்ட
சேரிமாடாடுகள்செத்துப்போய்வெண்ட
ஜெகமுழுதும்உதாரக்கினிஅண்ட
தீனர்கள்நாட - அவர்களை
ஈனர்கள்ஜாட - தங்கள்கத
வானதைமூட - அதுகண்டு
மானிகள்வாட
மேனிகுலைந்துமெலிந்தாரோஇப்படி
கோன்உனையனறிக்குடியாவதெப்படி. பஞ்சம்.

எ. மண்ணில்அநேகர்என்கண்ணின்முன்மாய்ந்தார்
மரஞ்செடிபுல்லையுமாடுபோல்மேய்ந்தார்
எண்ணில்லாப்பேர்கள்சருகுபோற்காய்ந்தார்
இளைத்துக்களைத்துத்தவித்துடல்ஓய்ந்தார்
ஏங்கிடுவாரும்-களைகொண்டு
தூங்கிடுவாரும்-அன்னம்உண்ண
வாங்கிடுவாரும்-உடன்உயிர்
நீங்கிடுவாரும்
ஈங்கிந்தவண்ணம்இருண்டதுமேதினி
தாங்கும்வேதநாயகாதஞ்சம்ஏதினி. பஞ்சம்.

# ஹிதோபதேசக்கீர்த்தனைகள்.

## கடவுளைத்தியானிக்கும்படி வற்புறுத்தல்.

கசO. இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீ - ஈசனுமத்தைவாழ்த்துவாய்- தினம்
வாழ்த்துவாய். மனமே.

அநுபல்லவி.

அனவரதமுநீ - அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண்டாடி. மனமே.

சரணங்கள்.

க. வம்புவார்த்தைகளேபெரும்பாபம்
வாய்க்குச்சேதமல்லால்என்னலாபம்
எம்பிரான்திருமகிமைப்பிரதாபம்
எடுத்துப்பேசுவதுசத்காலக்ஷேபம் மனமே.

உ. ஏகமாகஉள்ளுருகியேபரிய
இருகண்ணானந்தபாஷ்பங்கள்சொரிய
தேகபரவசமதாயன்புவிரிய
சிரகராதிகள் அஞ்சலிபுரிய. மனமே.

ங. கரும்புதின்னக்கைக்கூலியுமேனோ
கற்கண்டோ அமுதோபசுந்தேனோ
விரும்பும்பிரமானந்தமேயதுதானோ
வேதநாயகன்பேர்க்கிணைசொல்லநானோ. மனமே

---

இதுவும் அது.

---

கசக. இராகம்- அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீமறவாதே - ஐயன்பதத்தை. மனமே.

அநுபல்லவி.

கனவிலும் - நிதமுறு - நனவிலும்பலபல
நினைவிலும் - ஒழியாமல் - அனவரதமுமே. மனமே.

சரணங்கள்;

க. மண்ணுஞ்சராசரமும்விண்ணும்படைத்தளித்துநீக்கும்
பராபரன்தன்
வண்ணமலர்ப்பதத்தைக்கண்ணும்பொழுதில்இன்பந்தேக்கும்
ஆகையினாலே
உண்ணும்பொழுதும்வேலை-பண்ணும்பொழுதும்-ஒன்றை
எண்ணும்பொழுதுந்-துன்பம்-நண்ணும்பொழுதுமே. மனமே

உ. கல்லும்பெருமரமும் புல்லும்புனமுமேசஞ்சாரம்
செய்யுமந்திபோல்
தில்லும்புல்லும்திரியாவரமுஞ் செய்தென்னசாரம்
வெளியிலேதான்
செல்லும்பொழுதும்-வார்த்தை-சொல்லும்பொழுதும்-பகை
வெல்லும்பொழுதும்-பின்னும்-அல்லும்பகலுமே. மனமே.

ந. அஷ்டதிசையும் ஓடிக் கெட்டலைந்தோம்புவோம்சரீரம்
இருப்பிடத்தை
விட்டகலாமல்தியானநிஷ்டை செய்வதில்என்னபாரம்
பலவியாதி
குஷ்டம்வந்தாலுந் - துணைப் - பட்டம்வந்தாலும் -பெரும்
கஷ்டம்வந்தாலும் - பிறர் - வெட்டவந்தாலுமே. மனமே.

ச. கெடுக்கும்பவவினையை ஒடுக்கும்வேதநாயகனுமம்
துயர்வராமல்
தடுக்கும்இகபரமுங் கொடுக்குந்தினமும் உண்டுக்ஷேமம்
நித்திரைசெய்யப்
படுக்கும்பொழுதுந் - துகில் - உடுக்கும்பொழுதும்ஒன்றைத்
தொடுக்கும்பொழுதும் -சுகம் - அடுக்கும்பொழுதுமே.மனமே.

---

## இதுவும் அது.

### கசஉ. இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியாகிலுமனமே - ஐயனைநீ நினையாயோதினமே
இகபரசித்திபெறவே. இனி.

அநுபல்லவி.

தனியிளம்பருவமுந் தாண்டிப்போனேமே
பனைபோல்வளர்ந்துகிழப்பருவமானேமே. இனி.

சரணங்கள்.

ஆசைக்கொருகறுப்புமயிரேனும்இல்லையே
ஐயையோகொக்குப்போல்நரைத்ததுதலையே
காசுக்குதவாக்கிழமென்பதுநிலையே
கன்னியர்க்கும்இனிநாம்கசக்கும்வேப்பிலையே. இனி.

கண்கள்இரண்டும்மூக்குக்கண்ணாடிதேடும்
காலூசலாடும்ஓர்கழியைக்கைநாடும்
தண்கொள்ளும்வேரற்றுத்தந்தங்கள்ஆடும்
தடுத்தாலும்நில்லாமல்யௌவனம்ஓடும். இனி.

பசிவந்தபின்னெல்லைவிதைப்பதுமதியோ
படுந்தாகம்வந்தபின்வெட்டுதல்நதியோ
விசயஞ்செய்திடச்சாகுங்காலமேதகியோ
வீணேயுனக்குக்கெடட்டுப்போகச்சம்மதியோ. இனி.

காலந்தனக்கென்னசெய்தோம்அபகாரம்
கனத்தஆயுசைஅதுதினஞ்செய்யுஞ்சோரம்
மேலுமேலும்உடலில்விளைக்கும்விகாரம்
வேதநாயனேசொல்லேவேதாந்தசாரம். இனி.

---

# துர்க்குணங்களைவெளியிடல்.

---

கஉஎ. இராகம் - எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

நெஞ்சேஇந்நாடெங்குந்தேடினும
நீசர்நமைப்போலுண்டோ. நெஞ்

அநுபல்லவி.

அஞ்சாமல்நாளும் அகந்தைகள்நீடுவோம்
சஞ்சலப்பேயால் தலைசுற்றிஆடுவோம.

க. தேகம்உயிர்முதல்யாவையுமேதந்த
தேவன்தனைமறப்போம் - கரு
மேகநிழல்போல்மறையும்பொய்வாழ்வை
விரும்பிநலந்துறப்போம்
மோகவிகாரத்திலேதமோறுவோம்
முன்னென்றும்பின்னென்றுமாகப்பொய்கூறுவோம்
ஏகமாய்எங்கும்பிறர்களைத்தூறுவோம்
எப்படிஐயையோகாங்கரைஏறுவோம். நெஞ்சே.

உ. கோயில்குருக்கள்ஜெபதபம்யாவும
கொடுவிஷம்போல்வெறுப்போம் - தினம்
நேயமதாகவேதூயமறைசொல்லும்
நீதிகளைமறுப்போம்
ஆயிரம்பாவம்அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரைஆசையாய்எண்ணுவோம்
ஈயாஉலோபகுணத்தையேநண்ணுவோம்
ஏழைபசியோடிருக்கநாமுண்ணுவோம் நெஞ்சே.

ங. உள்ளபடிநமக்கெள்ளளவெனினும்
உத்தமந்தான்இல்லையே - பாவ
வெள்ளம்நிறைந்திடும்பள்ளந்தனிலே
விழுந்துகெட்டோம்நிலையே
வள்ளலைப்போல்வெறுமாயக்கூத்தாடுவோம்
வந்தஎளியர்க்குவாசலைமூடுவோம்
உள்ளேபகையும்உதட்டன்பும்நீடுவோம்
ஊரைஅடித்தேஉலையிலேபோடுவோம். நெஞ்சே.

ச. உற்றகலைஎல்லாம் கற்றமெய்ஞ்ஞானிபோல்
ஊரைமயக்கிடுவோம் - பழு
தற்றமெய்ஞ்ஞானத்தில்பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
மற்றவரைக்கெடுத்துப்பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால்வயிறுப்பிவீங்குவோம்
நற்றவம்செய்யாமல்நாளெல்லாம்தூங்குவோம்
நல்வேதநாயகன்பாதத்தைநீங்குவோம். நெஞ்சே.



## மனமயக்கந் தவிர்த்தல்



கஙச. இராகம்-யதுகுலகாம்போதி-அட்தாளசாப்பு

பல்லவி.

நீமலைக்காதே - நெஞ்சே - நீமலைக்காதே.

அநுபல்லவி.

நேமத்துடன்ஐயன்-நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைக்கொள்ளுவோம்-காமத்திலேசிக்கி.                    நீமலை.

சரணங்கள்.

க. மோகத்தையும்அவி - வேகத்தையும்தரு
போகத்தையும்உத்தி - யோகத்தையும்நம்பி.                    நீமலை.

உ. ஆட்டையும்மந்தையின் - மாட்டையுங்கட்டிய
வீட்டையுமுன்கெட்ட - கேட்டையுமேஎண்ணி,                    நீமலை.

ந. கீச்சுக்கீச்சென்றோடும் - மூச்சுப்போனால்ஒரு
பேச்சுக்காகாமலப் - பீச்சுக்குழல்நம்பி.                    நீமலை.

ச. நாட்டைக்கொள்ளையிடும் - வேட்டைக்காரன்நமன்
காட்டைக்கலைத்துயிர்க் - கூட்டைக்கொள்வான்ஐயோ-நீமலை.

ரு. கேட்டைத்தருஞ்சோற்று - மூட்டைதனைஒன்ப
தோட்டைப்பாண்டத்தைக்கற் - கோட்டையெனநம்பி-நீமலை.

சா. கொண்டையிலே ரத்நத் - தண்டையிலேவிழிக்
கெண்டையிலேமதன் - சண்டையிலேசிக்கி.                    நீமலை.

எ. சேலையென்றும்முத்து - மாலையென்றும்தினம்
வேலைகொள்ளும்பெண்கள் - காலைத்தழுவியே.                    நீமலை.

அ. சொத்துதயக்கென்று - கத்துவதன்றிஆ
பத்துக்குதவாத - புத்திரனைநம்பி.                    நீமலை.

கூ. தாயகனைவேத - நாயகனைவிட்டு
மாயவலைபட்டுத் - தூயநெறிகெட்டு.                    நீமலை.



## நற்புத்தி கூறல்

### கசரு. இராகம்-சுருட்டி-திரிபுடை தாளம்

பல்லவி

போனதுபோகட்டுமே நீஇனியாகிலும்
புத்தியாய்வாழ்மனமே.

அநுபல்லவி.

ஞானமில்லாத நடக்கையைத்தொட்டாயே,
நம்பினஎன்னை நட்டாற்றிற்கைவிட்டாயே. போனது.

சரணங்கள்.

க. எத்தனைநாள்இருந்தாலும் - ஒருநாள்
இறப்பதுசத்தியமே - அப்போ
தென்னவரும்புண்ணிய பாவம் அல்லாமல்மற்
றெல்லாம் அநித்தியமே
பித்தஉடம்பை வளர்த்திடச்செய்கிறாய்
பிரோதவயித்தியமே - என்றும்
பேதமில்லாப்பரன் பாதம்பணிந்தோர்க்குப்
பேரின்பம சாகித்தியமே
பத்தர்சங்கத்தைநீ நித்தம்பிரிந்தாயே
பங்கம்புரிந்தாயே -எங்குந்திரிந்தாயே. போனது.

உ. தன்றாரம்அன்றிப் பரதாரந்தாய்க்குச்
சமானம்இதுதேரோ - கெட்ட
தாசியைக்கண்டால் நமஸ்காரஞ்செய்துநீ
தப்பவழிபாரோ
இன்றுநாளையென்று நாள்போக்காமல்வினை
இக்ஷணமேதீரோ - பின்னும்
எந்தஉயிராயும் சொந்தஉயிரென
எண்ணித்தயைகூரோ
என்றும்பணப்பேய் தனைநீகுப்பிட்டாயே
ஏச்சுக்குட்பட்டாயே - சீச்சீநீகெட்டாயே. போனது.

ஈ. நாதனைப்பேசிடும் நாவினால்அற்ப
நரஸ்துதிபாடாதே - நாளும்
நானெனதென்றபிமானம்பிடித்துநீ
நாடெங்குமோடாதே

சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே- கோடி
தர்மம்உனக்குண்டு கர்மம்விளைக்கும்
தனத்தினைத் தேடாதே
போதவேதநாயகன் தாள்விடுத்தாயே
பொன்னை அடுத்தாயே- என்னைக்கெடுத்தாயே. போனது.

---

## நித்தியானந்தந்தேடல்.

௧௪௬. இராகம்-ஹிந்துஸ்தான்காப்பி- ஆதிதாளம்.

### பல்லவி.

நித்தியானந்தத்தைநாடு- பர
நின்மலசுகந்தேடு- மனமே. நித்தியா.

### அநுபல்லவி.

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத் துடன்உறவாடு. நித்தியா.

### சரணங்கள்.

௧. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பதுவோ சந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியும்தேகம்
ஐயோ அதனுடன் உனக்கென்னஸ்நேகம். நித்தியா

௨. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுங்கவலை விளைத்திடும்வித்து
சிச்சீ அதனை விரும்பல்விபத்து. நித்தியா.

௩. மெய்யேஒன் றுக்கும் உதவாப்பண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசகண்டம்
பொய்யோ இதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக் காயிரந்தண்டம். நித்தியா

௪. காண்பதெல்லாம்நில்லை யல்லஅநித்தியம்
காயம் இறந்திடவேண்டும்அகத்தியம்
வீண்பொருள்மீதுனக் கென்னபைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம். நித்தியா

---

## கள்ள ஞானம்.

---

கசஎ. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

புண்ணியம்போல் பாபம்- மனமே
புரிந்தோம்நாம் தினமே. புண்ணியம்.

அநுபல்லவி.

திண்ணமாகக்குளிக்கப் போயுந்தன்மேலே
சேற்றைப்பூசிக்கொண்டு திரும்புதல்போலே. புண்ணியம்.

சரணங்கள்.

க. கையிலேநாம்பிடிப்பது ஜெபமாலை
கக்ஷத்தில்வைப்பதுவோ கன்னக்கோலை
மெய்யாகத்தினம் படிப்பதுதர்மநூலை
மேலுமேலும்நமக்கு துன்மார்க்கவேலை. புண்ணியம்.

உ. ஒருபெண்வேண்டாமென்று கொள்வோம்சந்நியாசம்
ஊரில்உள்ளபெண்கள் மீதெல்லாம்நேசம்
பருகப்பசியில்லாத போதுபவாசம்
பசித்தால்ஒருபானைப் பருக்கையும்நாசம். புண்ணியம்.

ங. கடவுளைத்துதிப்பது போல்வாய்பாடும்
கண்ணுங்கருத்துங்கண்ட இடமெங்குமோடும்
திடமாகக்கோயிற்குள்ளே தேகம்போய்க்கூடும்
சிந்தனைவெளியிலே திரிந்துதிண்டாடும். புண்ணியம்.

ச. ஆனதலையில்வளர்ப்பது ஜடைமுடியே.
அனுதினமும்கெடுப்ப தாயிரங்குடியே
தானம்பிறர் அறியக் கொடுப்பதோர்கொடியே
தனியேவந்தவனுக்குத் தான்தடி அடியே. புண்ணியம்.

ரு. அடித்திடும்கொடுமையிற் புலிக்குநாமேலே
ஆகையினால்ஆசனம் புலித்தோலே
நடித்திடும்குரங்கு நாம்சேஷ்டையினாலே
நமக்குள்ள குறைவு பின்புறத்தொருவாலே. புண்ணியம்.

௬. அங்கமெல்லாங்கரு மேகவியாதி
அதனைமறைக்கமெய்யில் அணிவோம்விபூதி
நங்கையில்இல்லாப்பொருள் மனையாதி
நாம்துறந்தோம்நல்ல துறவறநீதி. புண்ணியம்.

எ. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம்ஒருசந்தி
இதரபக்ஷணங்களால் நிறைப்போம்தொந்தி
தேகபலம்ஒடுங்கில் விரக்தியாம்பிந்தித்
திடமானால்நம்செய்கை சிரிக்குமேசந்தி. புண்ணியம்.

அ. உள்ளத்தின் அழுக்கை எந்நாளுமேகழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடிவிழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம்
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம். புண்ணியம்.

கூ. பசியில்லாதவர்க்குச்செய்வோம்அன்னதானம்
பசித்துவந்தோனைச்செய்வோம்அவமானம்
சுசியாகப்பிறர்க்குபதேசிப்போம்ஞானம்
துர்க்குணக்கடலிலேதினஞ்செய்வோம்ஸ்நானம். புண்ணியம்.

க0. பெருமையாஅணிவதுகாவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வதுதர்மசத்திரமே
பரவியநமதுதுர்க்குணம்சமுத்திரமே
பாடோம்வேதநாயகன்சரித்திரமே. புண்ணியம்.

# பொருளாசையொழித்தல்

கசஅ. இராகம்-கனகவசந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

பொருளைவிரும்பவேண்டாம்-மனமே
பொருளைவிரும்பவேண்டாம்.

அநுபல்லவி.

ஒருவரிடமுங்நில்லா தூரெங்கும்பறக்கும்
திருவேதநாயகன்சேவடி துறக்கும். பொருளை.

## சரணங்கள்.

௧. பணமுள்ளவர்க்குநமன் பயப்படுவானே
குணமுடன் அவர்களைக்கும்பிடுவானே. பொருளை.

௨. தனவான்களைத்துயர்சார அஞ்சிடுமோ
கனசுகம் அவருடன் கலந்துகொஞ்சிடுமோ. பொருளை:

௩: பார்க்கஒட்டாமலேபார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலேவாயையுந்தடுக்கும். பொருளை.

௪. மண்டலத்தில்நமக்குவயிறெருகுகிரா
கண்டபடி உண்ணநாம்கபந்தனுக்கெகிரா. பொருளை.

௫. ஊரில்நம்மிருப்பிடம்ஒருமுழமட்டே
பாரிலேநமக்கேன்பலமனைக்கட்டே. பொருளை.

௬. உலகில்வயிறுநமக்குள்ளதுசாணே
மலைமலையாக்குவித்துவைக்குதல்வீணே. பொருளை.

௭. சங்கையில்லாமற்பணந்தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்புதமக்கையும்வருவாள். பொருளை.

௮. வித்தாரமாகப்பொருள்வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமேசெட்டியார்வாழ்வு. பொருளை.

௯. அருளுடன்ஏழைக்குதவாப்பணம்பிணமே
பொருள் அதைக்குழிவெட்டிப்புதைக்குதல்குணமே. பொ.

௧௦. பூதமானாலும்உண்ணப்போதுமாகாணி
ஆதலால்நமக்கேன் ஆயிரங்காணி. பொருளை.

௧௧. கெண்டைச்சேலைக்காரிதான்கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடித்திடும்குமரிசாகாளோ. பொருளை.

௧௨. வெறுங்கழுத்தாயிருந்தால்விக்குமோதொண்டை
உறுந்தலை அணிபோனால்உடையுமோமண்டை. பொருளை.

௧௩: கடுக்கன் இல்லாவிட்டாற்காதுகேளாதோ
உடுப்புகள் இல்லாவிட்டால்உடம்புநீளாதோ பொருளை

௧௪. கந்தலை அணிந்தவள்கர்ப்பம்ஆகாளோ
விந்தைநகைஉள்ளவள்மெலிந்துபோகாளோ, பொருளை.

கரு. பொருந்தச்செலவிடாமல்புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இல்லென்ன மணமே. பொருளை

கசு. நிதிவெள்ளியாதிகள் நிச்சயம்மண்ணே
புதையல்தன்னினமென்றுபுசிப்பள்மண்பெண்ணே. பொ.

---

## செல்வச்செருக்கு.

---

கசகூ. இராகம்-தேமநோகரி-ஏகதாளம்.

பல்லவி.

வீண் கர்வம்ஏன்மனமே - உனக்கு
வீண் கர்வம்ஏன்மனமே.

அநுபல்லவி.

காண்பொருள்சசலமுங் கடவுள் ஆதீனம்
கனதொண்டமானுந் தோட்டியுமேசமானம். வீண்.

சரணங்கள்.

க. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம்
நமக்குமுன்னே அதுபலர் அநுபோகம்
அம்மஅதற்குக் காத்திருப்பர் அநேகம்
அனைவர்க்கும்உண்டு ராஜீகதெய்வீகம். வீண்.

உ. தாசிகள்போல்செல்வம் பலருடன்கூடும்
தனமிருந்த இடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்யானையைக் கொசுகுமேசாடும்
குப்பைஉயர்ந்து கோபுரத்தையுமூடும். வீண்

ந. கனவிற்கண்டகத்திரிக்காய் கறிக்காமோ
கல்லால்இரும்பால்காயங் கொண்டோமோ
தினம்அசையாமல்மண்ணில் வேர்கொண்டோமோ
சினந்துநாம்சபித்திடில் திசையெல்லாம்வேமோ. வீண்.

ச. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினால்விடுவரோ தாயாதிகாரர்
வெம்பிச்சமயம் பார்த்திருப்பார்சோரர்
மிச்சத்தைச்சுருட்டுவார் மேல்அதிகாரர் வீண்

ரு, இடையிற்கோவணமின் றிப்பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைநமதுசொந்தம என்பதுபொய்யே
ஊரார்பொருளைநாம் சுமந்தோய்ஐயே. வீண்.

சு. ஜெகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியம்எல்லாம் ஜயமா
சுகதுக்கபேதம் இல்லாதிவ்யமயமா
துஷ்டன் இயமனுக்கு நமைக்கண்டால்பயமா. வீண்.

எ. நீடுந்தங்கையுந் தமைக்கயும்அதிநேசம்
நிதமுங்கைம்மாறிக் கொள்வார் அவர்வாசம்
சூடுண்டமாடுபோல் துள்ளல்ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம். வீண்.

அ. தாய்வயிற்றில்இருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாமவந்ததேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கலுண்ணாது வீண்.

---

## உலகவாழ்வை வெறுத்தல்

---

கரு0 இராகம்-ஹிந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

### பல்லவி.

வாழ்வைநம்பாதே - மனமே - வாழ்வைநம்பாதே.

### அநுபல்லவி.

தாழ்வில்லாதநமதுஸ்வாமி
தாளைத்தேடுபோடுபூமி. வாழ்வை:

### சரணங்கள்,

க. தேகமாம்ஸ மூட்டை - பல
ஜெந்துவுக்கும்நல்லவேட்டை - அதில்
ஒகோஅனந்தம்ஓட்டை - உயிர்
ஓடிடஎத்தனைபாட்டை - இந்த வாழ்வை.

உ. இன்றைக்காளுவார்நாடு-நாளை
எடுப்பர்கையிலேஓடு-உடல்
ஒன்றுக்குதவாதகூடு-இதை
உற்றுப்பார்த்தால்-வெட்கக்கேடு-புவி வாழ்வை.

௩. பெண்டுபெள்ளைக்கென்னவாட்டம்-நம்மைப்
பிடுங்கித்தின்பதில்நாட்டம்-கையில்
உண்டாகும்போதுகொண்டாட்டம்-செல்வம்
ஒய்ந்தால்சகலரும்ஓட்டம்-புவி வாழ்வை.

௪. இந்தஉலகத்திற்பிறந்தார்-முன்னம்
எத்தனையோபேர்கள்இறந்தார்-பெற்ற
தந்தைதாய்பாட்டரும்பறந்தார்-நாலு
தாரங்கள்போய்நம்மைமறந்தார்-புவி வாழ்வை.

௫. இன்றுபல்லக்கிஙிற்போவார்-நாளை
எடுக்கும்ஆள்களும்ஆவார்-நரர்
என்றவர்யாவருஞ்சாவார்-மதி
ஈனர்நரகத்தில்வேவார்-புவி. வாழ்வை.

௬. கூத்தில்அரசனைப்போலே-வேஷம்
கொண்டவர்க்குண்டோசெங்கோலே-புவி
சித்தியநாடகசாலை-அந்தச்
சாலையில்நாம்எந்தமூலை-இந்த. வாழ்வை.

௭. வண்டியும்ஓடத்திலேறும்-ஓடம்
வண்டியில்ஏறும்நாள்தோறும்-நாம்
கொண்டபொருள்கள்கைம்மாறும்-வேதம்
கூறுஞ்சொல்லேநிறைவேறும்-புவி வாழ்வை.

௮. எண்ணிக்கையில்லாமல்இங்கே-முன்னம்
இருந்தவரெல்லாம்எங்கே-நாமும்
நண்ணிப்போகவேண்டும்அங்கே-வேத
நாயகன்பாதம்நம்பங்கே-புவி. வாழ்வை

## உடலை வெறுத்தல்.

---

கருக. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

பல்லவி

உடலை,நம்பாதே-மனமே. உடலை,

அநுபல்லவி.

குடலுந்தசையுமெலும்புநரம்பும்
கொழுத்துப்பழுத்துப்புழுத்துநிரம்பும். உடலை,

சரணங்கள்.

க. இந்திரியமலமூத்திரம்-தசை
இரத்தம்நிறைந்தபாத்திரம்-பாச
பந்தப்பேய்வளர்க்ஷேத்திரம்-வெறும்
பவந்தநாடகசூத்திரம்-இந்த. உடலை,

உ. ஆசைப்பக்ஷியின்கூடு-பல
அசுத்தஞ்சேர்குப்பைமேடு-இதைத்
ஏசிப்போபோவென்னும்வீடு-கிட்ட
எட்டிவாவாவென்னுங்காடு-இந்த உடலை,

ந. கண்ணிற்பீளைகள்வடியும்-இரு
காதிற்குறும்பிபடியும்-சளி
வண்ணமூக்கில்வந்திடியும்-நல்ல
வாயும்எச்சிலாய்முடியும்-இந்த. உடலை,

ச. பயனின்றிவிழுமட்டை-கொடும்
பாம்புகழற்றுஞ்சட்டை-போலே
உயிர்போனால்வெறுங்கட்டை-இதை
உற்றுப்பார்த்தால்லொடலொட்டை-இந்த. உடலை,

ரு. காகம்நாய்நரிக்கூட்டம்-பல
கழுகுக்கும்நல்லஊட்டம்-கரு
மேகநிழல்போல்ஓட்டம்-இது
மெய்யல்லப்பொம்மலாட்டம்-இந்த. உடலை,

௬. எத்தனைபேர்புவியாண்டார்-அவர்
எல்லவருமுன்னேமாண்டார்-இங்கே
செத்தவரில்எவர்மீண்டார்-தெய்வ
சித்தம்ஒருவருந்தாண்டார்-இந்த. உடலை.

௭. மோடியேன்ஒருக்காலே-உடல்
முழுதும்எலும்புதோலே-அதில்
நாடிஒடுங்கினாலே-பின்பு
நமக்கிங்கேஎன்னவேலை-இந்த உடலை.

௮. கணவன்தெய்வமென்பாள்பாரி-அவள்
காரியத்திற்கெட்டிக்காரி-செத்த
பிணமுன்வருவாளோநேரில்-சுகம்
பிரிந்ததற்கல்லோஒப்பாரி-இந்த. உடலை.

௯. கிருமிகட்குபகரணம்-தசை
கிழிந்துவடியும்இரணம்-சிறு
கருமமேற்கொள்ளுந்திரணம்-இது
கரணந்தப்பினால்மரணம்-இந்த. உடலை.

௰. வேதநாயகன்கூறும்-சொல்லை
மீறினால்நலமாறும்-பல
காதந்துர்க்கந்தம்நாறும்-பித்தம்
கபமலஞ்சலம்ஊறும்-இந்த. உடலை.

---

## பண தூஷணை.

---

### கஙஉ. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

#### பல்லவி.

பணமேஉன்னால்என்னகுணமே-தண்டம்
பண்ணினேன்சற்றும்என்கண்ணின்முன்னில்லாதே. ப.

#### அநுபல்லவி.

மணமில்லாமதமோகங்குரோதந்துன்
மார்க்கமுமூர்க்கமும்யார்க்குமேபோதிக்கும், பணமே.

சரணங்கள்.

க. தேடிஉனைவைத்துமூடியவர்க்குநீ
திர்க்காயுசுதருவாயோ-இனி
நாடியமன்வந்துசாடிடும்போதுநீ
நானென்றுமுன்வருவாயோ
கூடியபேர்கள்குடியைக்கெடுப்பாயே
கொல்லச்சொல்லிப்பின்னுங்காட்டிக்கொடுப்பாயே
ஓடிஓடிஅற்பனைப்போயடுப்பாயே
உத்தமனைக்கண்டால்ஓட்டமெடுப்பாயே பணமே.

உ. மத்தியில்உன்னைப்படைத்ததல்லால்முன்
வரும்போதுகூடவந்தாயோ-இஷ்ட
சித்தியும்சத்தியும்நித்தியங்கைகூடச்
சிலாசாசனம்நீதந்தாயோ
புத்தியிருக்கும்இடம்விட்டுநீங்குவாய்
பொய்யும்புரட்டும்உள்ளஇடத்தோங்குவாய்
எத்திசையுங்கெடுத்துப்பழிதாங்குவாய்
ஈயாதவர்கையகப்பட்டுத்தூங்குவாய். பணமே.

ங. மண்ணில்உனைநரர்பண்ணினதன்றி
மனிதனைநீபண்ணினாயோ-உயர்
விண்ணினைமண்ணினைப்பண்ணினோன்நேசம்
விலகச்செய்சத்துருநீயோ
எண்ணரிதானஇடமெங்குமோடுவாய்
இந்திரஜாலஞ்செய்துவிளையாடுவாய்
வண்ணநரர்கள்மனக்கண்ணைமூடுவாய்
வைத்துப்புதைப்பவர்வாயில்மண்போடுவாய். பணமே.

ச. வஞ்சகமாயப்பிரபஞ்சமெல்லாம்நீ
வளைத்துச்செய்வாய்கொடுங்கோன்மை-கெட்ட
நஞ்சம்நிகருனைநெஞ்சபஎண்ணுகமெய்ஞ்
ஞானிகட்கல்லவோமேன்மை
பஞ்சமாபாதகங்கட்குநீஆலயம்
பாரில்துன்பமென்பதெல்லாம்உன்தன்மயம்
மிஞ்சஉனையுடையோர்க்கொழியாப்பயம்
வேதநாயகன்மேலுனக்குண்டோஜயம், பணமே,



## பரஸ்திரீ கமனம்விலக்கல்.

கரு௩. இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

மாதனை நினையாதே - நெஞ்சே. மாதனை.

அநுபல்லவி.

பூதலமேல்பெரும் - பாதகமும்விப
ரீதமுமேவரும் - ஆதலினால்மறு, மாதனை.

சரணங்கள்.

க. அருமஞ்சட்பூச்சல்லவோ முகக்காந்தி
அடிக்கடிபெண்கள் நிறமாறும் பச்சோந்தி
ஒருமையா அவர்களை விரும்புதல் பிராந்தி
உடற்குட்புகுந்து பார்த்தால் வரும்வாந்தி. மாதனை.

உ. முன்னழகும் பின்னழகுமேபட்டு
முகஅழகானது நெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பதுகவிஞர்கள்கட்டு
அழகுநில்லாமற் பறந்திடுஞ்சிட்டு. மாதனை

௩. யரித்திமோதர்கள் சுகம் அரைக்ஷணமே
மறுநிமிஷத்தில்உண்டாந் துன்பரணமே
பிரித்திடில் மலஜலம் எலும்பு தோல்கிணமே
பிராணன்போனால் நரிநாய் பிடுங்கிடும் பிணமே. மாதனை.

ச. மேனிமுழுதும் வெளிவேஷத்தின் தளுக்கு
மினுக்கெண்ணெய்பூசியே காட்டுவார் சளுக்கு
ஈனமறவேதினந் தண்ணீர் முழுக்கு
இல்லாவிடில்கப்பல் ஏற்றலாம் அழுக்கு. மாதனை.

ரு. இடையில்மயக்குவது சாலியன் சேலை
இருகாதில் ஜொலிப்பது தட்டான்வேலை
கடையிலே விற்பது கொண்டைப்பூமாலை
கன்னிக்குச் சொந்தமெல்லாம் வெறுந்தோலே. மாதனை.

௬. கன்னியர்விழிஉயிர் பிளந்திடும்அம்பு
கனதனம்நமன்குழல்உனைக்கட்டுந்தும்பு
அன்னியமாதர்கள் விஷமெனநம்பு.
அவருடன் பேசுவதேபெரும்வம்பு. மாதனை.

௭. இதமாகவேமணஞ் செய்தசீமாட்டி
இகபரம்இரண்டுக்கு மேவழிகாட்டி
இதரமின்னார்களைச் சேர்வோன்காமாட்டி
என்றைக்கும் அவனுக்கு மூத்தவள் பேட்டி. மாதனை,

௮. என்றுங்காமாதுரர்க்கு ரோகங்கள் நிலையே
ஈனரும்போட்டக்கையில் வேண்டும்வேப்பிலையே
அன்றுகொண்டவன் அறிந்தால் வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும் ஆபத்தமலையே. மாதனை.

௯. கழுவிவாசனை ஊட்டாவிடில் கெட்டவீச்சு
காதவழி அடிக்கும் இதுநிசப்பேச்சு
தொழும் அழகென்பதெல்லாம் மேற்பூச்சு
தோகையர் கிழமானல் கனஏச்சு. மாதனை.

௰. அழகழகென்பதெல்லாம் வெறும்ஜாலம்
அணியுந் துணியும்போனல் அலங்கோலம்
விழல்நிகர் சுகத்தினை வெறுப்பதுசீலம்
வேதநாயகன்சொல் அநுகூலம். மாதனை.

---

## இதுவும் அது.

---

## ௧௩௪. இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

### பல்லவி.

மனமேஉனக்குமாகாசுகிர்தம் - மறு
மாதனைநினையாதே மனமே.

### அநுபல்லவி

தினமென்சொற்படி கேட்டால்உனைத்துதி
செய்வேன்மறுத்திடில்-வைவேன்-வைவேன் மனமே,

சரணங்கள்.

க. சட்டிமுகத்தைச்சந்திரபிம்பமென்றும்-வெறும்
சதைக்கட்டிகளைத்தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச்சொர்னஸ்தம்பமென்றும்-மாதர்
முன்கமலைக்குஞ்சபாக்கம்பமென்றும்
மொட்டைத்தலைக்குமுழங்காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயே-வினை-படிந்தாயே-கெட்ட. மனமே.

உ. உச்சிட்டத்தை அமிர்தக்கட்டியென்றும்-நாறும்
ஊத்தைவாயைப்பவளப்பெட்டியென்றும்
மச்சம்பிளேவடியுந்திட்டியென்றும் - தே
வாங்குருவை அபூர்வசிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையைமெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயே-பொய்யைப்-படித்தாயே-கெட்ட. மனமே,

ங. செட்டிகளால் அல்லவோ இடையழகு-எண்ணெய்ச்
செக்கார்களால் அல்லவோ-சடையழகு
தட்டார்களால் அல்லவோ நடையழகு - மாதர்
தம்மழகெல்லாம் பலகடையழகு
குட்டிச்சுவரில் முட்டவெள்ளை பூத்தோரீ
குதித்தாயே-பெண்ணைத்-துதித்தாயே-கெட்ட. மனமே.

ச. சொத்தைப்பற்களை முத்துச்சரங்களென்றும்-மிகச்
சூம்பியதோளை மூங்கில்மரங்களென்றும்
சித்தமாகக்கமலங்கரங்களென்றும்-நாறும்
சிக்குமயிரைச்சலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்து வேதநாயகன் அடி
பிரிந்தாயே -துன்பம்-புரிந்தாயே-கெட்ட. மனமே.

---

## இதுவும் அது.

---

### கருரு. இராகம்-செளராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

பெண்ணாசையே பெரும்பித்து - அதில்
பிரமிப்பதெல்லாம்விபத்து பெண்.

அநுபல்லவி.

கண்ணாலேவலைபூட்டி அற்பசுகம்
காட்டிப்புருஷரை வாட்டிவதைக்கும். பெண்,

## சரணங்கள்.

க. கலகலென அசைப்பார் அவர்தண்டை
காட்டுமிருக மயிரோ கொண்டை
உலகைமயக்கும் அவர்சேலைக் கெண்டை
உற்றுப்பார்த்தால் நன்மைஏதவர் அண்டை. பெண்.

உ. கேவலம் அங்கமெல்லாம் பிணநாற்றம்
கிறுகிறெனமயக்கந்தலைக்கேற்றம்
ஓவியமேனிமினுக்குப் பொய்த்தோற்றம்
உள்ளேதிருப்பிப் பார்த்தால் முழுமாற்றம். பெண்.

௩. கட்டிகட்டியாகக் கண்பீளை சாரும்
காதிற்குறும்பி சளிஎச்சில்சேரும்
கொட்டும்வியர்வைதலைப் பேனும்ஈரும்
கும்பிநாற்றமாங்குளித்திட்டநீரும். பெண்.

௪. மணணில்எலும்புதோல் அல்லவோமாது
மற்றதெல்லாஞ் செட்டிதட்டார் செய்சூது
பெண்ணில்லாவிட்டால் பிழைப்பவர்க்கேது
பெண்ஜெபமும் அவர்போனால் செல்லாது. பெண்.

௫. மண்ணிற்பரஸ்திரியைச் சேரும்நிமித்தம்
வாழ்வுஞ் சுகமுந்தனமும் அநர்த்தம்
எண்ணில்லாத் துன்பமும் புண்களும்சித்தம்
ஈஎறும்புக்கு மகோற்சவம் நித்தம். பெண்.

௬. இரவிற்கூத்தாடிகள் வேஷம்எடுப்பார்
இருட்டில்எவருமயங்கிக் கொடுப்பார்
தரையில்மின்னார் பகல்வேஷம் தொடுப்பார்
ஜாலவித்தை செய்துலகைக் கெடுப்பார். பெண்.

எ. உண்டால்விஷம் வெட்டினாற்கொல்லுங்கத்தி
உன்னினோர் கணடோரைக் கொல்லும் பெண்சத்தி
அண்டாமல் ஆட்வர் ஓடுதல்புத்தி
அமர்வேத நாயகன் சொற்கேட்டால்சித்தி. பெண்.



# உய்யும் வழி.

௧௫௪. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

## பல்லவி.

உய்யும்வகையிதுநெஞ்சமே-வேறு
செய்யும்உபாயங்கள்வஞ்சமே. உய்யும்.

## அநுபல்லவி.

மையல்தருமும்மலங்களைநீக்கு
ஐயன்பொற்பாதத்துக்குன்னைஆளாக்கு. உய்யும்.

## சரணங்கள்.

௧. நிந்தைகலந்தமூவாசையே-நாளும்
நிக்கிரகஞ்செய்அப்பசாசையே
எந்தவிதத்திலுமாசையே-ஒழித்
தென்றென்றுஞ்செய்தெய்வபூஜையே. உய்யும்.

௨. நான்எனதென்றபிமானமே-மிக
நாட்டுவதுமதியீனமே
ஏன்உனக்கிந்தஅஞ்ஞானமே-நீதான்
என்றுஞ்செய்வாய்ஜெபத்தியானமே. உய்யும்.

௩. பெண்டுசேய்பண்டபதார்த்தமே-பெரும்
பீடையாம்அந்தச்சங்காத்தமே
கொண்ட்அறந்தான்யதார்த்தமே-அதைக்
கூடில்உண்டாம்பரமார்த்தமே. உய்யும்.

௪. மையல்மிகுந்துகெடாதே-புவி
வாழ்வென்பதுவெறுஞ்சூதே
நையும்மெய்யன்புவிடாதே-வேத
நாயகனைநிதம்ஓதே உய்யும்

## நெஞ்சொடுபிணங்கல்.

—:o:—

### கடுள. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

#### பல்லவி.

அநுதினம்இந்தப்படி-உன்னுடன்போர்கொடுக்க
யாராலாகும்நெஞ்சே அநுதி.

#### அநுபல்லவி.

கனபக்தரோடுசேர்ந்திடாய்-கர்மானுபந்தந்தள்ளாய் [ அநு.
தினமும்என்னுரைகொள்ளாய்-சீச்சீஇதென்னபிள்ளாய்

#### சரணங்கள்.

க அனந்தமுறைநான்சொல்லக் கேளாய்
அகந்தை அழியாயோ
தினந்தினமும் நீபுரிந்திடுந்துற்
செய்கைகள் ஒழியாயோ-நீ
நினைந்ததே திடமா-உன்னால்
நிதமுஞ் சங்கடமா
சினந்தகவலைக்கு நீஇருப்பிடமா
செய்வதெல்லாம் ஹடமா அநுதி

உ. படித்ததனிவேதந்தான் சொல்லிய
படிநீநடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக் கடவாயோ-நீ
பிடித்ததேபிடியா-ஆசைப்
பேயுன்னிடங்குடியா
உடுத்தமாயைக்கு நீமிதியடியா
உன்தொழில் இப்படியா. அநுதி.

ங. கடந்தமேலோர் பகர்ந்தமொழியைக்
கனவிலுமதியாயோ
நடந்தபொய்யாகிய வழிநீங்கி
நல்வழிமிதியாயோ-நாம்
அடைந்தஉடல்சதமா-புவிவாழ்
வானதுசாசுவதமா
தொடர்ந்துவேதநாயகன் ஹிதமாய்ச்
சொல்லியுமேமதமா அநுதி.

—◆—

## துர்க்குணம் போன்ற நற்குணங்கள்.

### கநு௮. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

செய்யவேண்டுமோனல் நீ அநுதினம்
செய் - செய் - செய் - மனமே. செய்ய.

அநுபல்லவி.

ஐயோவெறுத்தாய்நற் செய்கைகளையே
ஆகையிற்பின்சொலுந்துர்ச் செய்கைகளையே. செய்ய.

சரணங்கள்.

க. எதிர்உதவிகருதி ஈயாலோபம்
ஈனர்கள்காற்றடிக்கினும் அதில்சோபம்
வதிதீவினைமேல் தீராக்கோபம்
வருவதுவரட்டும் இப்படிப்பாபம். செய்ய.

உ. பரன்அடிமீதில் அடங்காமோகம்
பலதெய்வங்களைப் பணியாத்துரோகம்
இரவும்பகலும் புண்ணியந் தன்னில்இராகம்
இப்படியேதான் பாபம் அநேகம். செய்ய.

௩. பலருக்குடஉதவி செய்வதில் பலவந்தம்
பரஸ்திரீக்கிடம்ஈயாத நிர்ப்பந்தம்
தலமிசைபிறர்க்கிடர் செய்வதில்மந்தம்
தளராதிவ்வகை தோஷம் அனந்தம். செய்ய.

௪. பொய்கொலை களவுகள் செயஅறியாமை
புனிதர்போல்நாம் இலையென்னப் பொறுமை
மெய்விலகிய அவதூறுதராமை
மேன்மேல் இப்படியே பலதீமை. செய்ய.

௫. நற்குணந்துர்க்குணம் எனச்சொலும் அசத்தியம்
தன்காரியம் பேணுத அபத்தியம்
நற்கதிபெறுவதில்ஒழியாப் பைத்தியம்
நானிலத்திவ்வித மானதுஷ்க்கிருத்தியம். செய்ய

௬. நன்மைகின்மைகள் மேல்காமக்குரோதம்
நாளும் அச்செய்கையிலே பிடிவாதம்
தன்மகிமித்தம் சர்வலோக விரோதம்
தளராதிவ்வாறே அபராதம். செய்ய
௭. ஆட்கொள் வேதநாயகன் பாதமுத்தாரம்
அணியெனஉனக்குரைத் தேன்சவிஸ்தாரம்.
கேட்கிலை ஆதலிற்கொடுத் தேன் உத்தாரம்
கெட்டசெய்கைகள் உனதிஷ்டப்பிரகாரம். செய்ய.

---

## மனவஞ்சகத்தைப்பற்றி

---

### கருசு. இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

புரட்டெல்லாம்எங்கே படித்துக்கொண்டனை
புகலுவாய் மனமே - இந்தப். புரட்

அநுபல்லவி,

முரட்டுமோர்க்கம் சென்றிழைகிறாய் - அணு
முனையின்உள்ளும்நீ நுழைகிறாய் - இந்தப். புரட்

சரணங்கள்.

க. பொருளைத்தந்தவன் அருளைமறந்து
பொருளுக்கே உபசாரம் - செய்யும்
மருளர்போல் அற்பப் பொருளைவிரும்பி
வான்பரன் உபகாரம் - தன்னை
மறந்தாய்-என்னைத்-துறந்தாய்-பொன்னைச்
சிறந்தாய்-பின்னைப்-பறந்தாய்-பாரில்
உருளில்லாமல் தேரோட்டுகிறாய் - பானு
உதயம்இரவிற் காட்டுகிறாய் - கன
இருள்கொள் பாசத்தில் மாட்டுகிறாய் - நாளும்
என்னைப்பம்பரம் ஆட்டுகிறாய் - இந்தப். புரட்

உ. மண்டலந்தனில்கண்ட பொருளெலாம்
வண்மையென்றுநீ குறித்தாய் - பிர
சண்டஆசைகள் உண்டதாலேநீ
தலைமயங்கியே வெறித்தாய் - தனத்

தாசி-எனப்-பேசி-வினை
பூசினையே-சீசீ-பார
அண்டங்களைக் கை அடைக்கிறாய் -கால்போல்
ஆழ்கடல்மீதும் நடக்கிறாய் - பல
எண்டருவிண்ணும் கடக்குகிறாய் - புண்யம்
என்றால்எழாமற் கிடக்குகிறாய் - இந்தப். புரட்.

ந. என்னசொல்லினும்உன்னல் செய்யாயுனக்
கேனிந்தத் தலையரட்டை - மாளும்
முன்னமேஐயோ பின்னஞ்செய்கிலை
மூளுந்தீவினைத்திரட்டை - இது
மோசம்-எய்தும்-நாசம்-லவ
லேசம்-விசு-வாசம்-இன்றி
அன்னம்போலெங்கணும்பறக்கிறாய் - கல்லின்
ஆவிடத்தும்பால் கறக்கிறாய் - சுக
நன்னலந்தனைத் துறக்கிறாய் - வேத
நாயகன்சொல்லை மறக்கிறாய்-இந்தப். புரட்.

---

## மனமயக்கம்.

### கசுO. இராகம்-வசந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மயங்கிறாய்மனமே - ஐயோவீணே. மயங்.

அநுபல்லவி.

மயங்கிறாய்மனமே-வாழ்வுசொப்பனமே
மாறாமல்தினமே ஐயோவீணே. மயங்.

சரணங்கள்.

க. ஏகனைமோக்ஷத்-தியாகனைக்கருணைப்பிர
வாகனைப்பணியாமல்-ஐயோவீணே மயங்.

உ. எண்ணியபெரியோர்-நண்ணியபொருளாம்
புண்ணியம்புரியாமல்-ஐயோவீணே. மயங்.

௩. நேயம்உள்ளோர்கள்-தாயகன்வேத
நாயகனைத்தொழாமல்-ஐயோவீணே மயங்.

## காலதூஷணை.

——:0:——

### கசுக. இராகம் - தர்பார் - ஆதிதாளம்.

பல்லவி.

ஓகோகாலமே-உன்போல்எவர்க்-குண்டிந்திரஜாலமே. ஓகோ

அநுபல்லவி.

போகமாகவே அண்டம்பூவெல்லாமேய்வாய்
பூனைபோலிருந்துநீபுலியைப்போற்பாய்வாய். ஓகோ.

சரணங்கள்.

க. ஊரெல்லாந் தூங்கினும்உனக்கில்லை தூக்கம்
ஓயாமல்ஓடுவாயுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகளகொடுப்பவர்க்குன்மேல்ஏக்கம் ஓகோ.

உ. பாலனைக்கிழவராப்பண்ணியேகெடுப்பாய்
பகைமதன்ஜெபம்நடவாமலேதடுப்பாய்
காலிரண்டுடையார்க்குக்கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங்காட்டியேவிடுப்பாய். ஓகோ.

ங. ஆயுதமில்லாமல்யாவையும்அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும் அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுந்திராசுபோலேசகலமும்நிறுப்பாய்
சகலஉயிரையுஞ்சட்டியிலிட்டுவறுப்பாய். ஓகோ.

ச. கல்லைப்போல்உடம்பையும்வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மகிவாரம்ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைச்செல்லைப்போல்துளைப்பாய்
வீங்கழகியர்க்குகதேவாங்குருவிளைப்பாய். ஓகோ.

ரு. துக்கம்உற்றவர்க்குநீதொலையாமற்கிடப்பாய்
சுகமுள்ளபேர்க்குநீதுரிதமாய்நடப்பாய்
விக்கலும்இருமலும்வேதையுங்கொடுப்பாய்
மிஞ்சுங்கருமயிரைப்பஞ்சுபோற்கெடுப்பாய். ஓகோ.

